

# அம்ருதா

Amrudha Tamil Monthly

Volume 19 Issue 06 January 2025 Rs.30

ஆண்டு 19 இதழ் 06 ஜனவரி 2025 ரூ.30







## விளிம்புநிலையிலிருந்து எழுந்து வரும் திரைமொழி

அ.இருதயராஜ்

நோபல் உரை
மார்க்கேஸ்

தி.நகரும் தமிழ் பதிப்புப் பணியும்
சந்தியா நடராஜன்





ஆண்டு 19 இதழ் 06



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

ஜனவரி - 2025 விலை ரூ. 30



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்...

# மிரட்டும் பருவநிலை மாற்றம்!

"ஒரு புயல் முழுமையாக கரையைக் கடந்தபின்பும் கூட தென்மேற்கு, வடகிழக்குப் பருவமழைகள் அதற்குக் கூடுதல் ஈரப்பதத்தையும் ஆற்றலையும் வழங்கலாம் என்பதை ஃபெஞ்சல் புயல் நமக்கு உணர்த்தியிருக்கிறது. இதனாலேயே, ஃபெஞ்சல் புயல் கரையைக் கடந்த பின்னும் மழை கொட்டி தீர்த்தது" என்று பாம்பே ஐஐடி பேராசிரியர் ரகு முர்துகுடே தெரிவித்துள்ளார்.

● பிரபு திலக்

கடந்த சில ஆண்டுகளாகவே பருவநிலைகள் வழக்கமானதாக இல்லை. 2015 சென்னை வெள்ளம், தொடர்ந்து கேரளா வெள்ளம், கடந்த ஆண்டு தூத்துக்குடி வெள்ளம், இந்த ஆண்டு வயநாடு, திருவண்ணாமலை நிலச்சரிவு என தொடர்ந்து பாடாய்ப்படுத்துகிறது பருவ மழை.

அதுவும் இந்த ஆண்டு வானிலை ஆய்வாளர்கள் கணிப்புகளை எல்லாம் தொடர்ந்து பொய்யாக்கி போக்கு காட்டியது மழை. 'இனி வானிலையை கணிக்க முடியாது; அந்தளவு நாம் இயற்கையை சீர்குலைத்துவிட்டோம்' என்று பிரபல வானிலை ஆய்வாளர்களே அதிர்ச்சி தகவலை வெளியிட்டுள்ளார்கள். புயல்களைக் கணிப்பது இனி எவ்வளவு கடினம் என்பதை ஃபெஞ்சல் உறுதிபடுத்தி இருக்கிறது.



"தென்மேற்குப் பருவமழை முடிந்த காலகட்டத்திலிருந்தே வடக்கு இந்தியப் பெருங்கடலில் வெப்பம் நிலவியது. ஒரு லாநினா காலகட்டத்தின்போது இந்த வெப்பநிலை மேலும் பல புயல்களை உருவாக்கியிருக்கவேண்டும். ஆனால், அது நடக்கவில்லை. நவம்பர் 14ஆம் தேதி கிழக்கு இந்தியப் பெருங்கடலில் ஒரு காற்றழுத்தத் தாழ்வுப்பகுதியாக உருவான ஃபெஞ்சல், அப்படியே இருந்தது. 10 நாட்களுக்குப் பிறகுதான் வங்காள விரிகுடாவில் காற்றழுத்தத் தாழ்வு மண்டலமாக மாறியது. இன்னொரு வாரம் மெதுவாக நகர்ந்தபிறகுதான் இந்திய வானிலை ஆய்வு மையம் அதை ஒரு புயலாக அறிவித்து பெயர் கொடுத்தது.

ஃபெஞ்சலாக உருவான புயல் கிழக்கு நோக்கி நகர்ந்து வடக்கே திடீரென்று திரும்பி மீண்டும் தள்ளாடியபடியே மேற்கு நோக்கி வந்தது. பின்னணியில் வடகிழக்கு காற்று, மேற்கு நோக்கிய காற்று ஆகியவை வீசிக்கொண்டிருந்ததே இதற்குக் காரணம். வங்காள விரிகுடாவில் நிலவிய வெப்பம் ஃபெஞ்சலை மெதுவாக நகர அனுமதித்தது. கரையைக் கடந்தபின்பு நனைந்த கடற்கரை மணலில் இருந்து ஆற்றல் கிடைத்தது. ஆகவே விரைவில் வலுவிழக்காமல் அது புயலாகவே தொடர்ந்தது. முந்தைய மழைப்பொழிவுதான் ஃபெஞ்சலை வழக்கத்தைவிட அதிகமான காலம் வாழவைத்தது, அரபிக்கடலுக்குச் செல்லும்வரைகூட இது உதவியது" என்கிறார், பேராசிரியர் ரகு முர்துகுடே.

உலகின் பிற பகுதிகளிலும் இதுபோன்ற விநோதத்தன்மை இருந்தது குறிப்பிடத்தக்கது. அமெரிக்காவின் புயல் கணிப்புகளிலும் இந்த ஆண்டு விநோதமானதாக இருந்தது.

நுகர்வுக் கலாச்சாரம், காலநிலை மாற்றம், அதிதீவிர வளர்ச்சி புவி வெப்பமடைதலை அதிகரித்து உலகம் முழுவதும் பருவநிலை தாறுமாறாகச் சீர்குலைந்து கிடப்பதே இதற்கு காரணம் என்கிறார்கள் சூழியலாளர்கள்.

பூமியின் வெப்பநிலை அதிகரித்து வருவது வெயில், மழை அளவுகளை தாறுமாறாக மாற்றமடையச் செய்வதுடன் மோசமான பாதிப்புகளையும் ஏற்படுத்துகிறது. ஒரு பக்கம் வறட்சியின் கோரப்பிடி, இன்னொரு பக்கம் வரலாறு காணாத மழை என திகைத்துத் தடுமாறுகின்றன நாடுகள்.

பூமி வெப்பமடைவதை மனிதனுக்குக் காய்ச்சல் வருவதோடு ஒப்பிடலாம். மனித உடலின் சராசரி வெப்பநிலை 98.4 டிகிரி பாரன்ஹீட். இதற்கு மேலே சென்றால் காய்ச்சல் என்கிறோம். அதுவே 101, 102,

103 என்று உயரும்போது கடுமையான காய்ச்சல் ஆகிறது. உடலின் அதிக வெப்பநிலை மனிதனின் சராசரி இயக்கத்தைத் தடுக்கும். உடல்வலி கடுமையாகும். கட்டுப்படுத்த முடியாத காய்ச்சல் மரணத்தை வரவழைக்கலாம். இதேபோன்றுதான் பூமியும்.

பூமியின் சராசரி வெப்பநிலை 15 டிகிரி செல்சியஸ். பூமியின் நிலநடுக்கோட்டுப் பகுதியில் கூடுதலாகவும் துருவப் பகுதிகளில் குறைவாகவும் இருந்தாலும் ஒட்டுமொத்த சராசரி வெப்பம் 15 டிகிரி செல்சியஸ் என்று கணக்கிடப்பட்டுள்ளது. இதனைவிட வெப்பநிலை அதிகரிக்கும்போது பூமியின் நிலை மோசமாகும். ஆனால், 15 டிகிரி செல்சியஸை நாம் கடந்து நிறைய நாட்கள் ஆகிவிட்டது என்கிறார்கள் அறிவியலாளர்கள். அது மேலும் மேலும் அதிகரித்துக்கொண்டே வருவதன் விளைவுகள்தான் தற்போதைய தாறுமாறான பருவநிலை மாற்றங்கள்.

பூமியின் வெப்பநிலை அதிகமாவதற்குப் பெருமளவு காரணம் நாம் பயன்படுத்தும் பெட்ரோலியப் பொருட்கள், நிலக்கரி உட்பட்ட எரிசக்தியும் காடுகள் அழிக்கப்படுவதும்தான். நிலக்கரி, பெட்ரோல் எரிபொருள்கள் எரிக்கப்படும் போது கரியமில வாயு வெளியாகிறது. காடுகளை அழிக்கும் போது மித்தேன் வாயுக்கள் வெளியாகிறது. நைட்ரஜனை அடிப்படையாகக் கொண்ட உரங்களை அதிகளவில் பயன்படுத்தும் போது நைட்ரைட் ஆக்சைட் போன்ற வாயுக்கள் உற்பத்தியாகிறது. இப்படி இயற்கைக்கு மாறாக அதிக அளவு உற்பத்தியாகும் கார்பன் டை ஆக்சைடு, மீத்தேன், நைட்ரஸ் ஆக்சைட், குளோரா புளோரா கார்பன் போன்ற வெப்ப வாயுக்கள் காற்று வளி மண்டலத்தில் அதிகமாகி பூமி திருப்பி அனுப்பும் வெப்பத்தைத் தடுக்கின்றன.

எனவே, இந்த நான்கு வாயுகளை எவ்வாறு கட்டுப்படுத்தப்படுத்துவது என்பதுதான் இன்று நம் முன் உள்ள சவால். இன்றைய நிலையில் உலகின் ஒட்டு மொத்த எரிசக்தித் தேவை நிலக்கரி, பெட்ரோலியப் பொருள்கள் மற்றும் எரிவாயுக்களின் மூலமே நிவர்த்திச் செய்யப்படுகிறது. இந்த மூன்றின் பயன்பாடும் இல்லாத உலகத்தை நம்மால் கற்பனை செய்துகூட பார்க்க முடியாது என்பதுதான் நிஜம். ஆனாலும், இவற்றை இப்பொழுது பயன்படுத்துவது போலத் தொடர்ந்தும் நாம் பயன்படுத்தினால் உலகின் எதிர்காலமே கேள்விக்குள்ளாகும் என்பதும் நிதர்சனம்.

பூமி சூடாவதன் பாதிப்புக்கள் முதலில் கடலில் தெரிந்தது. பூமியின் தென் துருவத்திலுள்ள அண்டார்டிகா கண்டத்தின் பனிப் படலம் மொத்தத்தையும் மதிப்பீடு செய்துள்ள ஆய்வு ஒன்று, பூமி வெப்பநிலை அதிகரிப்புக் காரணமாக, தற்போது ஒவ்வொரு ஆண்டும் 160 பில்லியன் டன்கள் எடையளவுக்கு இக்கண்டம் பனிக்கட்டியை இழந்துவருகிறது என்று தெரிவித்துள்ளது. ஒரு சில நூற்றாண்டுகளில் அங்குள்ள பனி மொத்தமும் உருகலாம் எனவும் அஞ்சப்படுகிறது. "அது நிகழ்ந்தால் உலகத்தில் கடல் மட்டம் ஒரு மீட்டருக்கும் அதிகமாக உயர்ந்துவிடும்" என அமெரிக்க விண்வெளி ஆய்வு நிறுவனமான நாஸா தெரிவித்திருந்தது. இதனால், சிறு தீவுகளும் கடற்கரையை ஒட்டிய நகரங்களும் நீரில் மூழ்கும். வெப்பமடையும் போது தண்ணீர் விரிவடையும் தன்மை கொண்டது. அதனாலும் கடல் நீர்மட்டம் அதிகரிக்கும். கடல் நீர் மட்டம் அதிகரிக்கும் போது அவற்றில் ஏற்படும் புயல்களின் தீவிரமும் அதிகரிக்கும்.

எல் நினோ, லா நினா, மேற்கு ஆசியாவில் ஏற்பட்டுள்ள வெப்ப உயர்வு, ஆர்டிக் பகுதியில் ஏற்பட்ட பனி இழப்பு ஆகிய எல்லாமே வடக்கு இந்தியப் பெருங்கடலில் தாக்கத்தை ஏற்படுத்துகின்றன. தெற்குப் பெருங்கடலுக்கும் இந்தியப் பெருங்கடலுக்கும் நேரடித் தொடர்பு உண்டு. இதன்மூலம் வெப்பமான நீர் வந்துசெல்லும். புவி வெப்பமாதல் என்பது வழக்கமான காலநிலை மாறுபாடுகளோடு கலக்கும்போது கணிக்கமுடியாத தீவிரமான பருவநிலை அம்சங்கள் எப்படி உருவாகும் என்பதற்கு ஃபெஞ்சல் புயல் ஒரு நல்ல உதாரணம்.

எனவே, இதற்கு மாற்று வழிகளை நாம் கண்டுபிடித்தே ஆகவேண்டும். இப்போது உடனடியாக எரிசக்தி சிக்கனம், ஜீரோ கார்பன் எனர்ஜி, கார்பனை உட்கொள்ளுதல், குப்பைகள் மேலான்மை ஆகிய நான்கு வழிகளையும் நாம் செய்தே ஆகவேண்டும். உலகம் முழுக்க இந்தியா உட்பட பல்வேறு நாடுகளும் பருவநிலை மாற்ற விஷயத்தில் கவனம் செலுத்தி தீவிரமாகச் செயல்பட்டு வருகின்றன. ஆனால், "நாடுகள் பங்களிப்புடன் தனி மனிதர்களின் பங்களிப்பும் முக்கியமானது" என்கிறது ஐ.நா. சபை. நிச்சயமற்ற தன்மைகள் இவ்வளவு இருக்கின்றன என்பதை ஒவ்வொருவரும் மனதில் வைத்து செயல்படுவது அவசியம்.

நோபல் கமிட்டியின் செயல்பாடு, அதைச் சார்ந்துள்ள நடுநிலைமை அல்லது இல்லாமை, படைப்பு உயர்ந்ததா அல்லது மட்டமா என்று ஒவ்வொரு முறையும் பரிசு முடிவைத் தெரிவிக்கும் போது எழும் சர்ச்சைகள் எழுந்து, எழுந்தது போல் அடங்கியும் விடுகின்றன. ஆனால், உலக இலக்கியங்களுக்குத் தரப்படும் பரிசுகள் பலவற்றுக்கும் முன்பாக நோபல் பரிசு இன்றும் ஓர் உயர்ந்த பீடத்தைத் தக்கவைத்துக் கொண்டுள்ளது.

நோபல் உரைகள் எப்போதும் இலக்கிய ஆசிரியனின் காலத்திய சமூக, பொருளாதார, அரசியல் மற்றும் கலைச் சூழல்களைப் பிரதிபலிக்கும் விதத்தில்தான் வெளிப்படுகின்றன. இந்த உரைகளில் காணப்படும் ஒரு பொது அம்சம் படைப்பாளிகளின் இளமைக் காலமும் அவர்களின் படைப்புகளில் ஆழமாக அது பதிக்கும் விவரணைகளும்தான். இவ்வுரைகள் வாசகர் மனதில் எழுப்பும் சீரிய சிந்தனைகளும் ஆழமான புரிதல்களும் அவற்றைப் பேருரைகளாக மாற்றி விடுகின்றன. ஆனால், அவற்றை என்றும் மாறாத புனித வாக்குகளென சடுதியில் தீர்மானத்துக்கு வரவேண்டிய அவசியத்தை உண்டாக்காது, படைப்பாளியின் நோக்கம், அவன் எழுத்து பிரதிபலிக்கும் சமூகச் சூழல், இலக்கியப் பரப்புக்குள்ளேயே நிகழும் ஒத்த அல்லது மாறுபட்ட கருத்தாழங்கள் ஆகியவற்றைப் பரிசீலனை செய்கின்றன.

நோபல் உரைகளை அம்ருதா வாசகர்களின் முன் வைக்கிறோம் மாதம் ஒன்றாக.

**10**

1982

# இலத்தீன் அமெரிக்காவின் தனிமை

மெகெல்லனுடன் முதன்முறையாக உலகைச் சுற்றிக் கடற் பயணம் செய்த அந்தோனியோ பிகஃபெட்டா, எங்கள் அமெரிக்காவின் தென் பகுதிகளைப் பற்றி ஓர் நுணுக்கமான குறிப்பைத் தந்தார்.

**காப்ரியல் கார்ஸியா மார்க்கேஸ் / Gabriel García Márquez**

● **தமிழில்: ஸிந்துஜா**

*ஓர் கனவுலகத் தரிசனத்தின் முயற்சி போல அது இருந்தது. அதில் அவர் தொடைப் பகுதியில் தொப்புள்கள் கொண்டிருந்த பன்றிகள், தம் இணையரின் முதுகில் முட்டைகளையிட்ட கோழிகள்; நாக்குகள் அற்ற, கரண்டிகளை ஒத்த அலகுடன் திரிந்த பெலிகன்கள் ஆகியவற்றைப் பதிவு செய்திருந்தார். மேலும் அவர் ஒரு முறைதவறிப் பிறந்தாற் போன்று காணப்பட்ட விலங்கைப் பார்த்தார். அது கோவேறு கழுதையின் தலையையும் காதுகளையும் ஒட்டகத்தின் உடம்பையும் மானின் கால்களையும் ஒரு குதிரையின் கனைப்பையும் கொண்டிருந்ததாக எழுதியிருந்தார். படகோனியாவின் ஆதி முதல் மனிதன் ஒரு கண்ணாடியில் தன் ராட்சஸ உருவத்தைப் பார்த்து விட்டுக் கதி கலங்கினான் என்பதையும் விவரித்திருந்தார்.*



*இந்தச் சிறிய கவர்ந்திழுக்கும் புத்தகம் அந்தக் காலத்தின் யதார்த்தத்தைப் பிரதிபலித்தது, அது இன்றைய நாவல்களுக்கான அடிப்படையைச் சுட்டுகிறது என்று கருதலாம். கால வரிசைகளில் எழுதப்பட்ட அவை கணக்கிலடங்கா. நம்முடைய அடங்காத கற்பனையில் எழுந்த எல்டரோடா பொன்னாடு அவ்வப்போது உருவாக்கிய கலைஞர்களின் கற்பனை வீச்சுக்கு ஏற்பப் பல வருஷங்களுக்கு நடமாடி வந்திருக்கிறது.*

*காலத்தை மறுத்து, என்றும் இளமையைக் கொண்டிருக்க வேண்டும் என்ற கனவு முயற்சியில் வட மெக்சிகோவை அடைந்து, தன் தேடலை ஆரம்பித்த ஆல்வார் நூனஸ் கேப்சா த வாகாவுடன் அறுநூறு பேர்கள் சேர்ந்து கொண்டார்கள். கடைசியில் உயிருடன் திரும்பியவர்கள் ஐந்து பேர்தான். அன்றைய காலத்தில் ஆழங் காணமுடியாத மர்மங்களில் ஒன்று, குஸ்கோவிலிருந்து கிளம்பி, அதாஹுவால்பா மன்னனிடம் செலுத்த வேண்டிய கப்பமாக பதினோறாயிரம் கோவேறு கழுதைகள்*



ஆளுக்கு நூறு பவுண்டு எடையுள்ள தங்கத்தைச் சுமந்து கொண்டு சென்றாலும், இறுதியில் அடைய வேண்டிய இடத்தை அவை அடைய முடியவில்லை. பின்னாளில், காலனிய ஆட்சிக் காலத்தில் கார்டெஜெனாவில் வண்டல் நிலத்தட்டில் வளர்க்கப்பட்ட கோழிகளின் வயிற்றில் சிறு கட்டிகளாகத் தங்கம் காணப்பட்டது. தங்கத்தைத் தேடி அலைந்து திரிந்த ஒருவரைப் பற்றி இன்றும் நாம் அறிகிறோம். சென்ற நூற்றாண்டில், பனாமா இஸ்துமஸ் ரயில் பாதையைக் கட்டுவது பற்றி அமைக்கப்பட்ட ஒரு ஜெர்மானியக் குழு, அந்த ரயில் பாதையைக் கட்டலாம்; ஆனால், அப்போது அந்தப் பிரதேசத்தில் கிடைப்பதற்கு அரிதாயிருந்த இரும்பால் அல்ல, தங்கத்தால் என்று பரிந்துரைத்தது.

ஸ்பானியர்களிடமிருந்து நாம் பெற்ற விடுதலை நம்மைக் கிறுக்கத்தனத்திலிருந்து மீண்டு வெளியே வரும் வாய்ப்பைத் தரவில்லை. மூன்று முறை மெக்சிகோவின் சர்வாதிகாரியாக இருந்த ஜெனரல் அந்தோனியோ லோபஸ் சாண்டா அன்னா, போரில் இழந்து விட்ட தனது வலது காலுக்கு மிகப் பெரிய சவ அடக்கம் நிகழ்த்தினான். ஈக்வேடாரைப் பதினாறு ஆண்டுகள் அரசாட்சி புரிந்த அரசன் ஜெனரல் காபிரியேல் கார்சியா மொரேனோ இறந்த போது, அவனது உயிரற்ற உடல் சிம்மாசனத்தில் மெடல்கள் நிறைந்த சீருடையுடன் உட்கார வைக்கப்பட்டது. முப்பதாயிரம் விவசாயிகளைப் படுகொலை செய்த கொடுங்கோலனான ஜெனரல் மேக்சிமிலானோ ஹெர்மெண்ட்ஸ் மார்டினஸ் தனது உணவில் விஷம் கலக்கப்பட்டிருக்கிறதா என்பதை சோதனை செய்ய ஓர் ஊசலைக் கண்டுபிடித்தான். செங்காய்ச்சலின் பிடியிலிருந்து தப்பிக்க தெரு விளக்குகளில் சிவப்பு நிறத் தாள்கள் ஒட்டப்பட்டன. டெகுசிகல்பா சதுக்கத்தில் நிற்கும் ஜெனரல் ஃபிரான்சிஸ்கோவின் சிலை உண்மையில் பாரிஸில் உள்ள ஒரு பழைய பொருள்கள் விற்கும் கடையிலிருந்து எடுத்து வரப்பட்ட மார்ஷல் நேயின்னுடையது.

பதினோரு ஆண்டுகளுக்கு முன்பு நம் காலத்தின் இணையற்ற கவியான பாப்லோ நெருடா தன் வார்த்தைகளால் ரசிகர்களைப் புளகாங்கிதமடைய வைத்தார். அதற்குப் பின் நல் மனதுடைய சில சமயம் அப்படியற்ற ஐரோப்பியர்கள் அதனால் ஈர்க்கப்பட்டனர். இலத்தீன் அமெரிக்காவின் அரசியல் ஏற்றத் தாழ்வுகளில் சின்னா பின்னமடைந்த ஆண்களும் சரித்திர வீராங்கனைகளும் அவர்களது பிடிவாதத்தால் உருவாக்கிய அரசின் வீர்யம் ஐரோப்பியர்களை உலுக்கியது. ஓய்வென்பதை அறியாத காலமது. அஞ்சாநெஞ்சனான ஒரு தலைவன் அவனுடைய மாளிகை தீயால் சூழப்பட்ட போதும் தைரியத்துடன் எதிரியின் முழுப் படையையும் எதிர்த்து ஒருவனாக நின்று போரிட்டான்; தன் மக்களின் கௌரவத்தை நிலை நாட்டிய இன்னொரு மாபெரும் தலைவன் சந்தேகத்துக்குரிய இரண்டு விமான விபத்துக்களில் இன்னும் அது எப்படி ஏற்பட்டது என்று புலனாகவில்லை ஒன்றில் கொல்லப்பட்டான். ஐந்து போர்களும் பதினேழு இராணுவ சதிகளும் நடந்தேறின; கடவுளின் பெயரால் முதல் இலத்தீன் அமெரிக்க இனப்படுகொலையை ஒரு சர்வாதிகாரி செய்து முடித்தான். இதற்கிடையில் ஒரு வயது கூட நிரம்பாத இரண்டு கோடிக் குழந்தைகள் இறந்தனர். 1970க்குப் பிறகு ஐரோப்பாவில் பிறந்தவர்களின் எண்ணிக்கையை விட இது அதிகம். காணாமற் போனவர்களின் எண்ணிக்கை என்று ஒரு லட்சத்து இருபதாயிரம் பேர். ஏதோ உப்பாலாவில் வாழ்ந்த ஜனம், ஜனமல்ல என்று தீர்மானித்தது போல, பல கர்ப்பிணிப் பெண்கள் கைது செய்யப்பட்டு, அவர்கள் சிறையில் ஈன்ற குழந்தைகளை, ராணுவ அதிகாரிகள் அவர்கள் இஷ்டம் போல், தத்துக் கொடுத்தும் அநாதை இல்லத்தில் தள்ளி விட்டும் பாதகம் புரிந்தார்கள். நாட்டின் நிலைமையை மாற்றுகிறோம் என்று சொல்லி இரண்டு லட்சம் ஆண்களையும் பெண்களையும் கொன்றார்கள்.





நிகராகுவா, எல் சால்வடோர், கௌடேமாலா என்னும் மூன்று மத்திய அமெரிக்க நாடுகளில் மட்டும் ஒரு லட்சத்து இருபதாயிரம் பேர் இறந்தார்கள். இதுவே அமெரிக்காவில் நடந்திருந்தால் நான்கு வருஷங்களில் இந்த எண்ணிக்கை பதினாறு லட்சங்களாயிருக்கும்.

வருவோரை அரவணைத்து விருந்தோம்பும் சிலியிலிருந்து பத்து லட்சம் பேர் புகலிடம் தேடி ஓடினார்கள். இந்த எண்ணிக்கை சிலியின் மொத்த ஜனத் தொகையில் பத்து சதவீதம். இருபத்தி ஐந்து லட்சம் மக்கள் கொண்ட உருகுவே என்னும் சிறிய நாட்டிலிருந்து ஐந்தில் ஒருவராக மக்கள் நாட்டை விட்டு ஓடி ஒளிந்தனர். 1979க்குப் பிறகு எல் சால்வடோரில் நடந்த போரினால் ஒவ்வொரு இருபது நிமிஷத்துக்கும் ஒரு அகதி உருவாக்கப்பட்டான். இந்த அகதிகளின் மொத்த எண்ணிக்கை நார்வே நாட்டின் ஜனத் தொகையை விடப் பெரிதாக ஆகும் சாத்தியம் நிகழ்ந்தது.

இலக்கிய வெளிப்பாடு மட்டுமல்ல, இத்தகைய மாபெரும் மெய்ம்மைதான், சுவீடிஷ் அகாதெமியின் கவனத்தைக் கவர்ந்திருக்க வேண்டும் என்று நான் கூறத் துணிகிறேன். நான் மெய்ம்மை என்று கூறுவது வெற்றுத் தாள்களில் காண்பது அல்ல. அது நம்முடன் உடனிருந்து, ஒவ்வொரு கணமும் எண்ணவியலாத அளவில் தினமும் நடக்கும் சாவுகளைக் கவனிக்க வைக்கிறது. அதன் மூலம் தீராத படைப்பு உணர்ச்சியைத் தூண்டுகிறது, மிகுந்த துக்கத்தையும் அழகையும் சுட்டிக் காட்டி. அதில் சிக்குண்ட, ஆனால், அதிர்ஷ்டம் காரணமாக இந்தக் கொலம்பியா மனிதன், விசேஷ கவனம் பெற்றவனாகி விட்டான். நம்பிக்கை தரும் வாழ்க்கையை எளிதான முறையில் அடைய முடியாததுதான் நமது தலையாய பிரச்சனையா என்பதைக் கவிஞர்களும் பிச்சைக்காரர்களும் இசைவாணர்களும் தீர்க்கதரிசிகளும் வீரர்களும் அயோக்கியர்களும் நிரம்பிய அந்தக் கட்டற்ற மெய்ம்மையிடம் எவ்விதக் கற்பனைகளும் இல்லாது கேட்க வேண்டும். இதுதான், நண்பர்களே, நமது தனிமையென்னும் சிக்கலின் உச்சம்.

நமது திறமைசாலிகள் பெருமிதம் மிக்க தமது கலாச்சாரத்தைப் பயன்படுத்தி நாம் தெரிந்துகொண்ட மேற்கூறிய கஷ்டங்களை எவ்விதத் தடையுமின்றித் தீர்க்க முயல வேண்டும். அவர்கள் தங்களை எடை போட்டுக் கொள்ளும் அதே அளவைகளை நம்மிடமும் செலுத்தியது, வாழ்க்கையின் அழிவுத்தடங்கள் ஒவ்வொருவருக்கும் வேறு வேறு என்பதை மறந்து செயல்பட்டது, மிகவும் தவறானது. நமது அடையாளத்தை அறிந்துகொள்ளும் பெரும் முயற்சி, அவர்கள் எதிர்கொண்ட அதே மாதிரியான சிக்கலான தடங்களைஉள்ளடக்கியது என்று அறிந்திருக்க வேண்டும். நம்மைச் சார்ந்திராத வேறுபட்ட மெய்ம்மை மேலும் நம்மைப் பற்றி நாம் அறியாததற்கும் சுதந்தரத்தை முழுமையாகப் பெற முடியாததற்கும் தனிமைப்படுத்தப்பட்டுத் தடுமாறுவதற்கும் வழிகோலியது. மதிப்புக்குரிய ஐரோப்பாவின் இறந்த கால நினைவுச் சுவடுகளுடன் நாம் கவனிக்கப்பட்டிருக்க வேண்டும். அதன் முதல் எல்லைப்புறச் சுவரைக் கட்ட லண்டனுக்கு முன்னூறு ஆண்டுகள் ஆயின. ஒரு பேராயரை நியமிக்க அதற்கு மேலும் முன்னூறு ஆண்டுகள் ஆயின. எட்ரூரியாவைச் சேர்ந்த ஒரு மன்னன் வந்து அதன் சரித்திரத்தை மீட்கும் வரை இருபது நூற்றாண்டுகள் ரோம் இருட்டில் தடுமாறி உழன்றது; இன்று நமக்கு வெண்ணையும் கடிகாரமும் தந்து உபசரிக்கும் சுவிஸ் நாடு பதினாறாம் நூற்றாண்டில் தனது வீரர்களால் ஐரோப்பாவை ரத்தக் களறியாக்கியது. மறுமலர்ச்சிக் கால உச்சத்தின் போது பனிரெண்டாயிரம் ஜெர்மன் காலாட்படை வீரர்கள் ரோமை நாசப்படுத்தி அழித்தது மட்டுமில்லாமல், அங்கிருந்த எட்டாயிரம் பேரைக் கத்தியால் குத்திக் கொன்றர்கள். இவற்றை யாரும் மறந்து விடலாகாது.

ஐம்பத்தி மூன்று வருடங்களுக்கு முன் தாமஸ் மான் தனது குறுநாவல் கதாநாயகனான டோனியோ க்ரோகர் வடக்கும் தெற்கும் இணைந்து பெருமையுடையதாக விளங்க வேண்டும் என்னும் கனவில் மூழ்கியிருப்பதாகச் சித்தரித்திருப்பார். அந்த மாயத் தோற்றத்தை நான் தழுவ விரும்பவில்லை. இங்கு போரிட வந்த ஐரோப்பியர்கள் சற்றுத் தெளிவுடன், மனிதாபிமானத்துடன் எங்களை நோக்கிய விதத்திலிருந்து வேறுபட்டுச் செயலாற்றியிருந்தால் எங்களுக்கு உதவி செய்திருக்க முடியும் என்று நான் நம்புகிறேன். பரந்து பட்ட உலகில் தமக்கான வாழ்க்கை



ஒன்று உண்டு என்னும் மாயம் நிரம்பிய நம்பிக்கையை, உலகப் பகிர்வில் தங்களுக்கென்று ஒரு வாழ்க்கையைக் கொண்டிருப்பதாகக் கருதும் அனைத்து மக்களுக்கும் நியாயமான ஆதரவை, உறுதியான செயல்களாக மாற்றாத வரையில், நமது கனவுகளுடனான ஒற்றுமை நம்மைத் தனிமையில் குறைவாக உணர வைக்கும்.

இலத்தீன் அமெரிக்கா அதனுடைய சுய விருப்பமில்லாமலோ ஒரு பகடைக்காயாகவோ இயங்க விரும்பாது; அதனுடைய சுதந்திர தாகமும் சுயம் சார்ந்த மதிப்பீடுகளும் மேற்கத்திய விருப்பத்துக்கு உடன்படுவது என்பது ஒருவர் காணும் கனவே. அமெரிக்காவுக்கும் ஐரோப்பாவுக்கும் உள்ள இடைவெளியைச் சுருக்கிய ஊடுருவல் முயற்சிகள், எங்களின் கலாச்சாரத் தோற்றத்தை அதிகப்படுத்தி விட்டன. இலக்கியத்தில் எங்களுக்கு அளிக்கப்பட்ட சுயத்தன்மைக்கான சுதந்தரத்தை ஏன் எங்களின் சமூக மாற்றங்களுக்கான முயற்சிகளுக்குத் தர மறுக்க வேண்டும்? முற்போக்கான ஐரோப்பியர்கள் அவர்களின் சொந்த நாடுகளுக்கு வேண்டும் என்று விரும்பிய அதே சமூக நீதியை, ஏன் எங்களது இலத்தீன் அமெரிக்காவுமான இலக்கு என்று வெவ்வேறு முறைகளில் வெவேறு சூழல்களுக்கென்று அறிவிக்க முன்வரவில்லை? இல்லை. எங்கள் சரித்திரம் சந்தித்த அளவற்ற வன்முறையும் வலியும் நேர்ந்தது சமத்துவமின்மையினாலும் சொல்ல முடியாத கைப்புணர்வாலும்தான். எங்கள் நாட்டைச் சேர்ந்த மூவாயிரம் குழுக்களின் மேல் சாத்தப்பட்ட சதியால் அல்ல. ஆனால், பல ஐரோப்பியத் தலைவர்களும் பேரறிஞர்களும் நினைப்பது என்னவோ அப்படித்தான். சிறுபிள்ளைத்தனம் நிரம்பிய வயதானவர்கள் அவர்களது உல்லாசமான இளமை வாழ்க்கையை மறந்து விட்டு உலகின் இரு பெரும் வல்லரசுகளின் கருணையில் வாழ்வதை விட வேறு வழியில்லை என்று நினைப்பது சரியல்ல. என் நண்பர்களே, இதுதான் நமது தனிமையின் அளவீடாக ஆகிவிட்டது.

இப்படியிருந்தும் அடக்குமுறை, கொள்ளை, ஒதுக்கப்படுதல் ஆகியவற்றை நமது வாழ்க்கையின் மூலம் பதிலளிக்கிறோம். வெள்ளம், பிளேக் நோய், பஞ்சம், பிரளயங்கள், நூற்றாண்டுகளாகத் தொடரும் போர்கள் இவை யாவும், இறப்பை முன்னிறுத்தினாலும் அவை வாழ்வின் மீதான உறுதியான பிடிப்பைச் சலனமுறச் செய்ய முடிந்ததில்லை. வேகமாக வளரும் ஒரு பெரும் பேறு: ஒவ்வொரு வருடமும் மரணத்தை விட ஜனனம் ஏழு கோடியே நாற்பது லட்சம் அதிகமாக இருக்கிறது. வருடா வருடம் இது பெருகிக் கொண்டே போவது ஒரு நல்ல விஷயம். பெரும்பாலான இந்த மக்கள் தொகைப் பெருக்கம் ஏழ்மையான நாடுகளில் அதிகமாக இருக்கிறது. இலத்தீன் அமெரிக்காவும் இதில் அடக்கம். மாறாக செழிப்பு மிகுந்த நாடுகள் நூற்றுக்கணக்கில் அழிக்கும் பணியில் ஈடுபட்டிருக்கின்றன. மக்களை மட்டுமல்ல, இந்த உலகில் இன்று வாழும் சகல ஜீவராசிகள் மீதும் இந்த அழிப்பு தொடர்கிறது.

அன்றொரு நாள் என் குரு வில்லியம் ஃபாக்னர், “நான் மனிதனுக்கு முடிவு என்பதை மறுக்கிறேன்” என்றார். முப்பத்தி இரண்டு வருஷங்களுக்கு முன்பு அவர் ஏற்க மறுத்தது இன்று மனித குல வரலாற்றில் முதன் முறையாக ஓர் விஞ்ஞான சாதனையாக வெளி வந்துவிட்டது என்பதை நான் முழுமையாக உணராவிட்டால், அவருக்கான இந்த இடத்தில் நான் நிற்பதற்குத் தகுதி இல்லாதவனாகி விடுவேன். மனித குல வரலாற்றில் இந்த விஞ்ஞான உண்மை ஏதோ கற்பனை உலகினைச் சார்ந்தது போலத் தோற்றமளிக்கும் மெய்யான தருணத்தில் எதையும் நம்பும் கதைஞர்களான நாங்கள் எதிரான ஓர் கற்பனை உலகைப் படைக்கும் சாத்தியம் கொண்டவர்கள் என்று நம்பத் தயாராக இருக்கிறோம். அத்தகைய புதிய வீச்சு மிகுந்த கற்பனை உலகில் எவரும் மற்றவர் எவ்வாறு மரணம் அடைய வேண்டும் என்று தீர்மானிக்க இயலாது. அங்கு அன்பு, உண்மையையும் சந்தோஷத்தையும் தரும் வல்லமை வாய்ந்தது என்று நிலைநாட்டப்படும். ஒரு நூற்றாண்டுத் தனிமையில் ஒடுக்கப்பட்ட இனம் இறுதியாக ஓர் இரண்டாம் சந்தர்ப்பத்தைப் பூவுலகில் பெறும். ●

*mail to:* **weenvy@gmail.com**

# மீ. யூசுப் ஜாகிர் கவிதைகள்



முப்பது
நொடிகள் விழும்
சிக்னலில்
அன்றாட வாழ்வை
கொஞ்சமாய் நகர்த்தி
எதிர்காலத்தை
தேடுகிறார்கள்
நடைபாதைவாசிகள்..!!!
அதே முப்பது வினாடி
சிக்னலில் காத்திருப்பதில்
மொத்த வாழ்வும் இழப்பதை
போல சிலர் சலித்துக்கொள்கிறார்கள்
நகரவாசிகள்..!!!

இயல்பான வாழ்வைப்போல
அடுத்த முப்பது நொடிகள்
மீண்டும் சிக்னல் விழுகிறது..!!!

---

தொடர்ந்து அவதானிக்கும்
சில நிமிடங்களில்
இருள் கூட
கண்களுக்கு புலப்படத் தொடங்குகிறது..!!!

எவ்வளவு தான் உன்னை
அவதானித்து, என் எண்ணங்களை
உன் மீது குவித்து வைத்தாலும்
கொஞ்சமும் புலப்படுவதில்லை
உன் கண்களுக்குள் புதைந்து கிடக்கும்
காதல் காரிருள்..!!!

---

மரணித்தவர் ஒரே முறைதான்
வாழ்ந்து கொண்டிருப்பவர்கள் தான்
ஒவ்வொரு முறையும்
வாழ்வின் விழுமியங்களால்
மரணிக்கிறார்கள்..!!!

---

நமக்குள்ளான பிணக்குகளை
தீர்த்து வைப்பதில்
இரவுக்கு பெரும் பங்குண்டு..!!!

பெரும்பாலான நிறங்கள்
கருப்பு வண்ணத்தை பூசிக்கொள்ளும்
இரவில் தான்
வண்ணமயமாகிறது
நம் நினைவுகள்..!!!

இருளைப்பூசி இயல்பாய்
மறைந்துகொள்ளும் பகல்
பொழுதைப்போலவே
நானும் நீயும் ஊடலில்
மறைந்து கொள்கிறோம்..!!!

*mail to:* **yusufjakir1712@gmail.com**



# கடைசி சந்திப்பு

மூன்று முறை சொல்லி அனுப்பிவிட்டார், கோவிந்தராஜன். ராஜத்துக்கு அங்கே போக மனமில்லை. வாழ்நாளெல்லாம் அவளை அண்ட விடாமல் தன் ஜாதிப் பெருமையைக் கட்டிக் காத்தவர், எதற்காக இத்தனை வருடங்கள் கழித்து வரச் சொல்ல வேண்டும்.

● **வேலு ராஜகோபால்** ஓவியம்: **பிரியா பிரகாஷ்**

*தேடித் தேடிப் போன நேரமெல்லாம், வசைபாடித் தீர்த்த அவர் இப்போது ஏன் அழைக்க வேண்டும்? மருத்துவமனையில் இருக்கிறாராம். பத்து வருடங்களுக்கு முன்னால் அழைத்திருந்தாலும் போயிருப்பாள். இப்போது*

பிள்ளைகள் காலேஜில் படித்துக் கொண்டிருக்கிறார்கள். அவளே தட்டுத் தடுமாறிக் கொண்டிருக்கிறாள்.

கடைசியாக அவரைப் பார்த்த தினம் ஞாபகம் வந்தது. பத்துப் பதினைந்து வருடங்கள் இருக்கும். இரண்டு காம்பவுண்டுகள் தள்ளியிருக்கும் மிகச் சிறிய குடித்தனமொன்றில் குடியிருந்த சொந்தக்காரியை மீனாம்மாவை, தெருவிலிருந்த பெட்டிக் கடையில் காய்கறி வாங்கப் போகும் போது பார்த்தாள். அவள்தான் சொன்னார், "உங்கப்பா வந்திருக்கார்." ராஜத்தின் மண்டையில் விர்ர்ரென்று ஏதொ ஒன்று விஷம் போல் ஏறியது. "நானும் வர்றேன்" என்று சொல்லிவிட்டு வேகமாக தன்னுடைய காம்பவுண்ட் வீட்டுக்குள் சென்று காய்கறிகளை வைத்துவிட்டு, அங்கே உட்கார்ந்து கொண்டிருந்த அம்மாவிடம் சொன்னாள்: "மீனா வீட்டுக்கு அப்பா வந்திருக்கிறாராம். நான் போய்ட்டு வர்றேன்."

அவரைப் பார்த்து நாலு கேள்வி கேட்டால்தான் மனது அமைதியாகும். அவர் தன் வீட்டுக்கு வந்துவிட்டால், அதைவிட மகிழ்ச்சியானது எதுவும் இல்லை. அம்மா எதுவும் பேசுவதற்குள் அவள் வெளியே போய்விட்டாள். மனைவியையும் மகளையும் பார்க்காமல் பக்கத்துக் காம்பவுண்டில் இருக்கும் தன் மருமகளின் தங்கை வீட்டுக்கு வந்துவிட்டுப் போய்விடுவாரா? மீனாம்மாவின் வீட்டுக்கு விரைந்தாள் ராஜம். அவள் தெருவுக்குள் வரும்போதே, அவளுடைய அப்பா, அவளுக்கு முன்னால் வேகவேகமாக அந்தக் காம்பவுண்டிலிருந்து வெளியேறி வேறுபக்கம் போய்க் கொண்டிருந்தார். ஏன் அவர் வேக வேகமாகப் போகிறார்? இருவருக்கும் இடையில் பத்துப் பன்னிரண்டடி தூரம் இருந்தது. அவர் வேகமாக நடப்பதைப் பார்த்து, அவரை நடந்து எட்டிப் பிடிக்க முடியாது என்று, "அப்பா, தங்கம்மாள் கூப்பிடுகிறாள்" என்று உரக்கக் கத்தினாள். தெருவில் ஆண்களும் பெண்களும் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தார்கள். அவர் வேக வேகமாக நடந்துகொண்டே ஏதோ சொன்னார். அவர் சொன்னது அவள் காதில் விழவில்லை. அப்படியே போய்விட்டார். ஒரு வேளை 'தங்கம்மாவும் உங்க மகளும் பக்கத்து வீட்லதான் இருக்காங்க'ன்னு மீனாம்மா அவர்ட்ட சொல்லியிருப்பாளாயிருக்கும். 'பாக்க வருவா'ன்னும் சொல்லியிருப்பா. யாரிடமிருந்து ஓடுகிறார்? 'தப்பு செஞ்ச மனது ஓடத்தான் செய்யும்.' கலங்கிய கண்களுடன் அவள் வீட்டுக்கு திரும்பும் போதுதான் கவனித்தாள். அவளுடைய மகன் நடந்ததையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்திருக்கிறான்.



மீண்டும் வீட்டுக்கு வந்த போது அம்மா கேட்டாள்: "என்ன ஆச்சு?'

'ஒன்றுமில்லை. அந்தம்மா நீயும் நானும் இங்கே இருக்கோம்னு சொல்லியிருப்பா போல, ஒரே ஓட்டமாய்ப் போய்விட்டார். தங்கம்மா கூப்பிடுறான்னு சத்தமாகச் சொன்னேன். ஏதோ பதில் சொன்னார். என் காதில் சரியாக விழவில்லை. போய்விட்டார்."

தங்கம்மா சொன்னாள்: "அவரு வரமாட்டார்."

இருவருக்கும் இது புதிதல்ல. அத்தோடு அது முடிந்துவிட்டது.

இப்போது அம்மாவுக்கு பொன்னம்மாவுக்கு எண்பத்தி எட்டு வயதாகிவிட்டது. ராஜத்துக்கும் அறுபத்தி ஒன்பது வயதாகிவிட்டது. இனி யார் எங்கே இருந்தால் என்ன? ஆனாலும் கூப்பிட்டுட்டார். 'இப்போதாவது கூப்பிடணும்னு தோணியிருக்கே. போய்த்தான் பார்க்கிறேன். என்னதான் நடக்கும்?'

அவருடைய கணவரும் சொன்னார்: "தொண்ணூறு வயதிருக்கும். சாகக் கிடக்கிறார்னு நெனைக்கிறேன். ஏதாவது தோணியிருக்கும்." அவளுக்கும் ஒரு குறுகுறுப்பு இருந்தது. அவரே பலமுறை வெட்டிவிட்டாலும் எனக்குள் ஏதோ துளிர்த்துவிடுகிறது. இப்போது அவருடைய முறை போல. இந்த முறை அவள் என்ன செய்வாள்? அவளுக்கே தெரியவில்லை. பஸ் ஏறி மதுரைக்குப் புறப்பட்டாள். அவளுடைய நினைவுகளும் கடந்த காலத்தை நோக்கி விரைந்தன.

அவள் வாழ்கையில் மதுரை ஒரு முக்கிய இடம் பிடித்திருக்கிறது. தம்பி அங்கேதான் இருக்கிறான். அவனுடன், அப்பா இருக்கிறார். இதற்கு முன்னால் அவரைப் பார்க்க எப்போது போனாள்? பதினைந்து வருடங்களுக்கு முன்னால், உடன் வேலைபார்த்த செண்பகம், "நான் போய்ப் பேசுகிறேன்" என்று அவளுடன் வந்தாள். "அந்த அவிசாரி கதையைப் பேசாதீங்கோ" என்று அவளிடம் சொன்னார். அவளுக்கு அப்பா என்று சொன்னாலே வாய் எரிந்தது, சிந்தை காய்ந்தது.

அதற்குப் பதினைந்து வருடங்கள் முன்னால், இரு குழந்தைகளையும் கூட்டிக் கொண்டு போயிருந்தாள். மூத்தவனுக்கு நான்கு வயதிருக்கும் சின்னவளுக்கு இரண்டரை வயதிருக்கும். "இந்தப் பிள்ளைகளை அவனிடம் விட்டுவிட்டு வா. நான் உன்னை வீட்டோட சேத்துக்கறேன்" என்று சொன்னார். அவர்கள் சூத்திரனின் பிள்ளைகள். அவருடன் வாழத் தகுதி

இல்லாதவர்கள். "என்னை நான் இருக்கிறபடியே ஏத்துக்கறேள்ன்னா வர்றேன்" என்று பதிலடி கொடுத்துவிட்டு வந்தாள்.

அப்பாவும் தம்பியும் அவன் குடும்பமும் குடியிருந்த ஒண்டிக் குடித்தனம் சின்னதாக, மிகவும் மோசமான நிலையில் இருந்தது. அரைப்பட்டினி கிடந்தவர்கள் போலிருந்தார்கள். அவரும் தம்பியும் அவன் மனைவியும் அவள் மகளும். அவருக்குத் தேவை அவளது சம்பளம். அரசுச் சம்பளம். தனக்கு மட்டுமே வேண்டும். மகள் அல்லவா? அவளும் தர விரும்பினாள். ஆனாலும் வீம்பு. தன்னைப் மீறிப் போனவள் என்ற கோபம்.

பெற்ற பிள்ளைகளை விட்டுவிட்டு, இத்தனை வருடங்களாக அவளை அவரிடமிருந்தும் சமூகத்திடமிருந்தும் காப்பாற்றி வைத்திருக்கும் முருகனை விட்டுவிட்டு வர வேண்டுமாம். அவளால் திரும்பிச் செல்ல முடியாது. 'இந்த அப்பனை எதிர்த்து, என்னைக் காப்பாற்றிக் கொள்ள, முருகனைத் திருமணம் முடித்தேன். இந்த அப்பன்தான் இவருக்கென்ன மரியாதை என்னைக் கடத்துவதற்காக காரில் ஆட்களை அனுப்பியது. எட்டாங்கிளாஸ் படித்த சர்டிபிகேட்டை எடுத்து ஒளித்துவைத்துக் கொண்டு டிரைய்னிங் சேரவிடாமல் தடுக்க முயற்சி செய்தது.' அவளும் விடவில்லை. சாத்தூர் பள்ளிக்கூடத்து பிச்சைக்குட்டி சாரிடம் சொல்லி எட்டாங்கிளாஸ் படித்ததாக இன்னொரு சர்டிபிகேட் வாங்கி டிரைய்னிங்கில் சேர்ந்துவிட்டாள்.

அவள் டிரைய்னிங்கில் சேர்ந்த போது, வெள்ளைக்காரிதான் மேட்ரன். விதவை என்றதும் மிகவும் அரவணைத்து ஆதரவோடு, கரிசனத்துடன் பேசினாள். ஆனாலும் அதற்குப் பின்னால் ஏதோ ஒன்று மனதை அரித்தது. கிறித்தவ மடத்தில் சேர்ந்து கொண்டால் என்னென்ன பலன் என்று மேட்ரன் வெளிப்படையாகச் சொல்லத் தொடங்கிய போது, அவளுக்குப் புரிவது போலிருந்தது. ஆனால், மேட்ரனை எதிர்த்து எதுவும் பேசமாட்டாள். அந்த வெள்ளைக்காரி ஒருத்திதான் அவள் மீது உண்மையிலேயே கருணை வைத்திருந்தாள். அவள் விதவை என்று தெரிந்ததும் மற்றவர்கள் ஒரு மாதிரிப் பார்த்தார்கள். அபசகுனம் போல அவர்கள் கண்ணில் அவள் பட்டிருக்க வேண்டும். அந்தக் காலம் அப்படி. ஆனால், வெள்ளைக்கார மேட்ரன் அவளை மரியாதையோடும் கனிவோடும் நடத்தினாள்.

அந்த வெள்ளைக்காரியிடம் இருந்த கருணை கூட அவளுடைய அப்பாவிடம் இல்லை. கணவன் வீட்டில் என்னை இருக்க விட்டிருந்தால், அவர்கள் நன்றாகப் பார்த்துக் கொண்டிருப்பார்கள். சொல்லவும் செய்தார்கள். அவர்களிடம் இருக்க விடவில்லை. ஏமாற்றிக் கல்யாணம் செய்தவர்களாம். நம்ப முடியாதாம். அவளை வலுக்கட்டாயமாக இழுத்துக்கொண்டு வந்துவிட்டார். இங்கே வந்து என்ன கிழித்தார்? அவள் வாழ்க்கையை இன்னும் பாழாக்கினார்.

அந்தக் காலம் என்ன? இந்தக் காலத்தில் கூட, அவமரியாதைகள் தொடர்கின்றன. பர்வதம் மாமி, வரலக்ஷ்மி பூஜை நடத்திய போது அவளைக் கூப்பிடவில்லை. மற்றப்படி அவளிடம் அவ்வளவு நெருங்கிப் பேசுகிறவள். சொந்தக்காரி. முக்கியமான இடத்தில் அவளைக் கைவிட்டுவிட்டாள். "இவள் இப்போது சுமங்கலி போலத் தோன்றினாலும் இவளும் விதவையாக இருந்தவள்தான். தாலி பாக்கியத்துக்குப் பூஜை செய்யும் போது அதில் இவள் கலந்து கொள்ள முடியாது" என்பது பர்வதத்தின் வக்கிர புத்தியாக இருக்க வேண்டும். அதைவிட முக்கியமானது அவளுடைய முந்தைய வாழ்க்கையை மற்றவர்களிடம் சொல்லியிருப்பாள் என்ற கோபம். 'அந்த எதுத்தவீட்டு மாமி, அதான், உங்க பெஸ்ட் ஃபிரெண்ட ஏன் கூப்பிடல'ன்னு பார்வதியம்மாவோ கங்காவோ கண்டிப்பாகக் கேட்டிருப்பார்கள். 'அவளா, முதல்ல ஒருத்தனைக் கல்யாணம் முடிச்சு, அவர் செத்துப் போனதுக்கப்புறம், இந்த முருகனைக் கல்யாணம் பண்ணிண்டுட்டா! இவரும் வேற ஜாதி.' இதைவிட மோசமாகப் பேசியிருக்கக் கூடும். அன்றிலிருந்து பர்வதம் மாமியுடன் பேச்சை நிறுத்திக் கொண்டாள். அவளும் பேச வேண்டும் என்று முயற்சி செய்யவில்லை. இவள் நினைத்தது நடந்திருக்க வேண்டும். இல்லையென்றால், அதற்கப்புறம் எப்போதும் போல சகஜமாகப் பேசியிருக்கலாமே!

எட்டையாபுரம் வந்துவிட்டது. பஸ்ஸ்டாண்டை பஸ் சுற்றி வந்த போது, அவள் இந்த ஊரில் வேலை பார்த்தது ஞாபகம் வந்தது. இங்கேதான் கொஞ்சம் நிம்மதியாக இருந்தாள். பையனுக்கு இரண்டரை வயதிருக்கும். சின்னவள் பிறந்து ஒருவருடம் ஆகி யிருந்தது. பையன் பேசத் தொடங்கிய போது தெலுங்கில் பேசினான். அவளுக்குப் பெருமையாக இருந்தது.

அந்தக் காலத்தில் அப்பா அவளைத் தன்னுடைய கட்டுப்பாட்டில் கொண்டுவரச் செய்த முயற்சிகள் எல்லாம் தோல்வியில் முடிந்துவிட்டன. முருகன் ஒருநாள் அவருக்குச் செய்தி அனுப்பிவிட்டார். 'இனிமேல் என் மனைவிக்கு எதிராக ஏதாவது செய்தால், கையைக் காலை வெட்டி விடுவேன்." இப்படி ஒரு ஆள் அப்பாவுக்குத் தேவைப்பட்டார். அதனால்தான் அவளுக்கு முருகனைப் பிடித்துவிட்டது. அதற்கு அப்புறம் அவர் அவளைத் தொந்தரவு செய்யவில்லை.

ஆனால், அம்மாவை அங்கும் இங்குமாக அலைக்கழித்துக் கொண்டிருந்தார். 'குருடியை வச்சிண்டு என்ன பண்றது?' என்று அவருக்குத் தெரியவில்லை. 'அவரைப் போல ஒரு ஸ்திரிலோலனை வைத்துக் கொண்டு என்ன பண்றது?' என்று பாட்டி பொன்னம்மாவுக்கும் தெரியவில்லை. பொன்னம்மாவின்

அப்பா ராஜத்தின் தாத்தா மாப்பிள்ளை வீட்டுக்குப் போய், 'நீங்கள் ஏன் அவளை தள்ளி வச்சுட்டேள்?' என்று கேட்கவும் இல்லை. அவரால் கேட்டிருக்க முடியாது. அவரும் அவருடைய மனைவி குருடு என்பதால் மாமனார் வீட்டுக்கு அனுப்பியவர். அவருடைய முந்தைய தலைமுறையிலும் இது நடந்திருக்கிறது. குருடான பெண்களைத் தள்ளி வைத்து விடுவது எவ்வளவு சௌகர்யம்? கண்களுக்குச் சிகிச்சையளிப்பது பற்றி மூன்று தலைமுறைகளாக ஏன் யோசிக்கவே இல்லை? வீட்டில் பொத்திப் பொத்தி வைத்திருந்தவர்களை அன்னியர்களிடம் எப்படிக் காட்டுவது? இவர்களெல்லாம் என்ன மனிதர்கள்? மனைவி குருடியானதும், அவளைப் பிறந்த வீட்டுக்கு அனுப்பிவிட்டு, இன்னொரு கல்யாணம் முடித்துக் கொண்டவர்கள்.

ராஜம் மருத்துவமனையில் வேலைபார்த்ததால், நாற்பது வயதுக்கு முன்னாலேயே கண்ணாடி போட்டுக்கொண்டாள். அவளுடைய மகனுக்குச் சிறு தலைவலி வந்தாலும், உடனே பதற்றமடைந்து, கண் டாக்டரிடம் கூட்டிச் சென்று பார்த்துவிடுவாள். விட்டமின் ஏ அண்ட் டி கொடுத்தே அவனை வளர்த்தாள்.

தங்கம்மா மேலூரில் இருந்த ஒரு சிறிய வீட்டில் தனியாக இருந்து கொண்டாள். துணைக்குத் தன்னைப் போலவே கண்பார்வை இழந்த, தன்னுடைய தம்பியையும் வைத்துக்கொண்டாள். தம்பிக்கு, கண்பார்வை இல்லாதோருக்கான உதவித்தொகை கிடைத்தது. அதை வைத்துப் பிழைத்துக் கொண்டிருந்தார்கள். அவரும் சும்மா இல்லை. 'ராஜத்தை எனக்குக் கட்டி வைத்துவிடு' என்று அம்மாவைச் நச்சரித்துக் கொண்டிருந்தார். நல்ல வேளை ராஜம் தப்பித்துவிட்டாள். அவளுக்குத் தோதான வழியைத் தேர்ந்தெடுத்து வாழ்வை அமைத்துக்கொண்டாள்.

பிறகொரு நாளில் அம்மா தனியாகக் கிடந்து அல்லாடிக் கொண்டிருப்பதற்கு இரக்கப்பட்டு அவளைத் தன்னுடன் கூட்டிக் கொண்டு வந்தாள். அப்போது அம்மாவுக்கு ஐம்பது வயதிருக்கும். அதற்குப் பிறகு தொண்ணூறு வயதில் சாகும்வரை அவள் தன் கணவரிடம் ராஜத்தின் அப்பாவிடம் பேசியதில்லை. ஏன்? சந்தித்தது கூட இல்லை. 'சூத்திரன் வீட்டில் குடியிருக்கிறாள்' என்ற வசையும் அவளுக்கு அப்பா வழங்கினார். 'எல்லோருக்கும் அப்பாக்கள் எப்படியெல்லாமோ இருக்கிறார்கள். எனக்கு மட்டும் ஏன் இப்படி ஒரு அப்பா?' என்று பல நாட்கள் அவளுக்குத் தோன்றும்.

மதுரையில் ஆஸ்பத்திரிக்குள் நாலு மணிக்கு மேல்தான் போக முடிந்தது. ஒரு ஜெனரல் வார்டில் அப்பாவின் கட்டில் இருந்தது. தொடக்கத்தில், "எப்படி இருக்க? என்ன ஆச்சு" என்று தொடங்கிய பேச்சு, அத்துடன் முடிந்திருக்கும். அவர்தான் அவளுக்குத் தீயை வைத்தார். "என்னைய கூட்டிட்டுப் போய்டு. நான் உன் கூட வந்திர்றேன்" என்று சொன்னதும் அவளுக்குக் கோபம் வந்துவிட்டது. கண்மண் தெரியாத கோபம். என்னென்ன பேசினாள் என்றே அவளுக்குப் பின்னாளில் நினைவில் இருக்கவில்லை.

"என் வாழ்க்கையக் கெடுத்த பாவியே நீதானே! சென்னையில மாமனார் வீட்ல இருந்துக்கிறேன்னு சொன்னேன். விடல. டிரைய்னின் போறேன்னன். சர்டிஃபிகேட்ட ஒளிச்சு வச்சுட்ட, வேலை பார்க்கிற இடத்தில வந்து அம்மாவ வச்சுக்கிட்டு ஆஸ்பத்திரி முன்னால உட்கார்ந்துகிட்டு, 'ஐயாமாரே! அம்மாமாரே'ன்னு கூப்பாடு போட்டு என்னைக் கேவலப்படுத்தின, என்னைக் கடத்துறதுக்கு ஆளனுப்பின. என்னைத்தான் இந்தப் பாடு படுத்தினேன்னா, பாவம், ஊமையான தம்பி வீட்ல வெட்டிச் சோறு தின்னுக்கிட்டிருந்த. பொண்டாட்டியையாவது ஒழுங்காப் பாத்துக்கிட்டயா? அதுவும் இல்லை. அவளையும் நாந்தான் பாத்துக்கிட்டிருக்கேன். என்ன செஞ்சுட்டேன்னு உன்னை கூட்டிட்டுப் போவேன். என் அப்பனா நீ! மனுஷனா நீ, என் வாழ்க்கைய நாசமாக்கின எதிரி நீ! உன்னைய கூட்டிட்டுப் போக மாட்டேன்!"

அவள் பேசிக் கொண்டேயிருந்தாள். பக்கத்துக் கட்டிலில் படுத்திருந்த இன்னொரு கிழவர், "என்னம்மா, இப்படிப் பேசற. என் மக வந்து என்னைக் கூட்டிட்டுப் போவான்னு எதிர்பார்த்துக்கிட்டு இருந்தார்" என்றதும் அவருக்கும் டோஸ் விட்டாள்.

"ஏன்யா, இவரு என்ன செஞ்சாருன்னு தெரியுமா? முன்னப் பின்னத் தெரியாமப் பேசாதீங்க. இன்னைக்கு வயசானதும் பாத்துக்க வக்கில்லன்னு என்னைத் தேடுறார். அவரு நல்லா இருந்த போது எத்தனை முறை கேட்டிருக்கேன். ஒரு தடவையாவது அன்போட பேசியிருக்காரா. என்னைக் கண்டாலே விரட்டி யிருக்காரு. அவர்ட்ட எப்படிப் பேசுவேன்? ஒரு மானம் மரியாதை சூடு சுரணை இருந்தா இப்படிக் கேப்பாரா? இவர் யாரையும் வாழ விடல. அங்க மூணு கிழடுக. நாங்களே கஷ்டப்பட்டுடு இருக்கோம்! இவரு இங்கெயே இருக்கட்டும்" என்று சொல்லிவிட்டுக் கிளம்பிவிட்டாள்.

அதுதான அவர்களது கடைசிச் சந்திப்பு. அதுவரை அவளைப் பொசுக்கிக் கொண்டிருந்த தீ அணைந்துவிட்டது.

இரண்டு வருடங்களில் அவர் இறந்துவிட்டார். அவள் போகவில்லை. ஏழாயிரம் ரூபாய் தம்பிக்கு அனுப்பி வைத்தாள். ஈமச் சடங்குகள் செய்யவில்லை என்ற பாவம் மகனுக்குப் போய்ச் சேர்ந்து விடக் கூடாதென்று அந்தப் பணத்தை மகனிடமிருந்து வாங்கிக்கொண்டாள். ●

*mail to:* **vrajagopal59@gmail.com**

# ராஜன் ஆத்தியப்பன் கவிதைகள்

ஓவியம்: **கே. தனுஷ்**



1

**யா**னையொன்றை விழுங்குவதுபோல்
நான் கண்ட கனவு
விடிகாலையின் பாயில்
சுருட்ட முடியாமலிருந்தது.

யானையாகக் கண்டது
எனது காலத்தையா
கற்பனையையா
என்னையா

நானொரு கோயில் யானையிடம்
நாலைந்து நாள் பேசிப்பார்த்தேன்
யானை என்னிடம் பேசிய மொழி
தமிழைப்போல் எனக்குப் புரிந்தது

சாலையோரத்தில் வாகனங்களின்
சக்கரங்கள் காறித்துப்பும் மழை வெளியில்
எனது முகம் போய் அலைகிறது.
யானை போல் ஊர்திகள்
சாலையை நிரப்புகின்றன
எதுவும் சொல்வதற்கில்லை
அனாதைக் கனவாய்
திசைகளில் அடித்துச் செல்லப்படுகிறது
பெருஞ்செவிகள்.

ஒருமுறை
வானவில்லில் எனது நிறத்தையும்
சேர்க்கலாமென்று யானை சொன்னது
நானப்போது ஒரு நல்லமிளகின்
அளவிலிருந்தேன்.





## 2

செம்மண்ணை
நீர்பெய்து மிதித்துக் குழைப்பது
பாதங்களுக்கு இதமானது

குச்சியோ பரலோ இல்லாதிருந்தால்
கால்களுக்குக் கொண்டாட்டம்.

பொங்கு செவ்வாளை மண்ணை வெட்டிக்
குவிக்கையில்
சினமுறும் தரை
சேதப்படுத்தும் கால்விரல்களுக்கு
செம்மண்ணே மருந்து.

குழைத்த மண்ணைத் திரட்டியுருட்டி
தாவர வேலிக்குப்பதில்
மதில் வளர்ப்பதை
சுவர் வளர்ப்பதை விரும்பாத ஒருவன்

குழைத்ததைச் சுட்டு
சிற்பம் செய்தான்
மண்ணிலிருந்து தெய்வம் எழுந்தது

கொஞ்சம் அகந்தையோடிருந்தவனை
எள்ளிச் சிரித்தக் கூட்டம்
அத்தனையும் ‘ஓட்டையுருவம்’ என்றது.



## 3

**நே**ற்று ஒரு கதவைத் தள்ளித் திறந்து
வெளியேறிய நான்
இதற்குமுன் திறந்த கதவுகளைக் குறித்த
ஓர்மைகளைத் துலக்கிப் பார்த்தேன்

எனது முகம்
கதவுகளுக்குள் நுழையுமப்போது
மின் விளக்காகவும்
புறம் மீளுகையில்
மண்ணெண்ணெய் விளக்காகவும்
அநேக காலங்களைச் சந்தித்திருக்கிறேன்.

நீளும் பெருவெளியில் நான்
ஓடிக்கொண்டிருந்தது
கதவின் விளிம்பினில் முட்டி
எனது நெற்றியிலோர்
வடு உண்டாக்குவற்குத்தானே.

ஆனால்
எனக்கு கதவுகளின்
வேறு வேறான சிற்ப செதுக்குதலில்
ஆர்வமில்லை
வெளியே நிறுத்தும் யுக்தி அது.

எண்ணற்ற கதவுகள்
பூமியின் பெரும்பரப்பில்
நான் எதைத் திறக்கிறேன்
எதிலிருந்து வெளியேறுகிறேன்.

மாபெரும் நிலைக் கண்ணாடியின்
முன்னிருந்து
கதவின் ஒற்றைப் பாழியில்
மூடித்திறந்து தொங்கி விளையாடுகிறேன்

காலத்தைத் திறந்து மூடும்
கோடிக் கதவுகள்.

## 4

**கா**தலைப்போல்
புளித்துப்போன மது
உலகத்தில் எதுவுமில்லை என
கடைத்தெருவில் ஒருவன்
சொல்லிச் சென்றான்.

கேட்டு நின்றவர்களின் கறுத்த மௌனம்
கொலையருவாளின் கேள்விக் குறியாய்
அவனைப் பின் தொடர்ந்தது.

தூரத்தில் செல்லும் அவன்
நூற்கண்டு ஒன்றை
சுற்றித் தொகுப்பது தெரிகிறது
நூலின் ஆதி நுனியின் மீது
அநேக நூற்றாண்டுகள் சுருள்வதும் தெரிகிறது.

காதலைப் பொருள்படுத்துவது
உருப்படுத்துவது
இரண்டிற்கும் எதிரானவனாய்
அவனைப் புரிந்துகொள்ள நினைக்கையில்

பனி வெண்மை விளிம்பு கொண்ட
கொலைக்கருவிகளில் பீடித்த
பழந்துருவின்
சிவப்பில் விரவிய
மஞ்சள் பொக்காளங்கள்
காற்றில் பொடியாய் உதிர்கின்றன

சேலைச் சரிகையின் மஞ்சள் நுண்மைகள்
முகத்திலும் மார்பிலும்
கைப் புறங்களிலும் ஒட்டியிருக்க
ஒவ்வொன்றாய் தோலிலிருந்து
நிமிண்டி எறிந்தபடி
வீட்டிற்கு செல்லும் வளைவில் திரும்புகிறேன்

அவன்
நரைத்த பின்னந்தலையில்
வானவில்லொன்றைத் தாலாட்டிச் செல்கிறான்.
குரல் கேட்கிறது
'காதல்
கடவுளுக்கும்
கடவுளின்மைக்குமிடையே புளித்த மது.



5

புராதன முகங்களாய்
எங்களைப் பார்க்கும்
வழிப்போக்கர்கள்

நாகரீகப் பையொன்றைத் திருடிய
எங்களில் ஒருவனை
பொதுவெளியில் துவைத்து சோர்கின்றனர்

அவர்களின் உடலில் வேதனை
மேகமாய் நிழலிட்டுக் கடக்கிறது.

அசைவில் வீழ்ந்தொழியும்
விந்தின் நீர்மத்தைத் தொட்டு விலகும்
மூலிகைச் செடிகளின் வேர்களுக்கு
சொற்களென்பது வெறும்
பிளாஸ்டிக் குப்பைகள்.

சாயங்காலங்களில் மட்டும்
சிறகு கொள்ளும் அழகிய பறவையாய்
கவிதையை தீர்மானம் கொள்ளும் தருணம்
எங்களை நோக்கி பறந்து வந்தன
புத்தக மூட்டைகள்.

மூட்டை புத்தங்கங்கள்
புத்தக மூட்டைகள்
மூட்டை பூச்சிகள்

நாங்கள்
மூட்டைப்பூச்சிகளை சந்திப்பதென்று
தீர்மானித்தோம்.

*mail to:* **rajanathiappan0101@gmail.com**

# எழுதி எழுதி மேற்செல்லும் சூஃபி கதைகள்

அரபு தேசத்தின், பல்வேறு இனக்குழு மக்கள் தங்களது பழைய வாழ்க்கை முறைகளைக் கைவிட்டு, புதிய சமயமான இஸ்லாத்தினைத் தழுவி, புனித யாத்திரைக்காக மக்கா நகரின் அருகிலிருக்கும் அராபத் மைதானத்தில் திரண்டிருந்த சமயத்தில், அவர்கள் முன் நபிகள் நாயகம் நிகழ்த்திய இறுதிப் பேருரைக்கு இஸ்லாமிய வரலாற்றில் மிகுந்த முக்கியத்துவமுண்டு. இஸ்லாத்தை பரிபூர்ணமாக்கிய சம்பவம் என்று அப்பேருரையைச் சுட்டும் மரபுண்டு.

● சஃபி

*"இஸ்லாத்தைத் தழுவுவதற்கு முன்பு அஞ்ஞான காலத்தில் உண்டான கொலைக்குப் பழிவாங்கக் கூடாது, அவைகளை ரத்து செய்துவிட வேண்டும்; வட்டி வாங்கக் கூடாது; அடிமைகளுக்கு நீங்கள் உண்ணும் உணவையும் நீங்கள் உடுத்துவது போன்ற உடையையும் கொடுங்கள், உங்கள் மனைவிகள் மீது உங்களுக்கு உரிமைகள் இருப்பதுபோல் அவர்களுக்கும் உங்கள்மீது உரிமைகள் உண்டு" என்று இஸ்லாமிய சமூகம் தனக்குள் பேண வேண்டிய சீர்திருத்தம் பற்றிய அறிவிப்புகள் அவ்வுரையில் இருந்தன.*

*இச் செய்திகள் போக, "அரபியரல்லாதாரை விட அரபியர் மேம்பாடுடையவர்களல்லர்; அரபியர்களை விட அரபியரல்லாதார் சிறந்த வரல்லர்."*



*"சிகப்பு நிறமுடையவர்கள், கறுப்பு நிறத்தவர்களை விட மேலாண்மை கொண்டவர்களல்ல. அதுபோல்தான் கறுப்பு நிறத்தவர்கள், சிகப்பு நிறத்தவர்களைவிட மேம்பட்டவர்களல்ல. உங்களில் மேன்மையான குணமுடையோரே புனிதமானவர்" என்று சமூகப் பொதுவாழ்வில் நிலவ வேண்டிய சமத்துவத்துக்கான அற மதிப்பீட்டை உள்ளடக்கிய தாயும் அப்பேருரை இருந்தது.*

*அவ்வுரையின் அறச் செய்தியினை, கண்ணியறாமல், தொடர்ச்சியாகக் கொண்டுசெல்பவராக இருந்திருக்கின்றனர் 'இறைவனின் நண்பர்கள்' என்ற கூடுதல் அந்தஸ்து பெற்ற சூஃபி மகான்கள். சூஃபிகள் தங்களது ஆன்மிகக் கொடி வழியுறவின் மூலத்தை நபிகளிடமிருந்தே தொடங்குவர்.*

*கல்வியறிவு பெறாத நபிகளின் வழித்தடத்தில், இஸ்லாமியப் பேரரசானது அரபு தேசம் தாண்டி, உலகின் பல பாகங்களுக்கு விரிந்தபோது வளமான தத்துவக் கருத்துக்களையும் அனுபூதி மரபுகளையும் தோற்றுவித்திருக்கிறது. செம்புலம் சேர்ந்த நீர்போல, சென்ற இடங்களின் தன்மைகளைச் சுவீகரித்துக்கொண்டு பல்வேறு நிறங்களில் இஸ்லாம் இருக்கிறது.*

*தத்துவத்தில், அரிஸ்டாட்டிலுக்கு அடுத்து 'இரண்டாம் ஆசான்' என்றழைக்கப்படும் அல்ஃபராபி தோன்றியிருக்கின்றார். இமாம் கஸ்ஸாலி, இப்ன் ரோஷ்த், அவிசென்னா போன்ற பெரும் தத்துவாசிரியர்களும் தோன்றியிருக்கின்றனர். பகுத்தறிவினையும் மனித சுதந்திரத்தினையும் மையப்படுத்தி வாதிடும் 'முதாசிலா' என்ற பிரிவினரும் மத்திய காலத்தில் இருந்திருக்கின்றனர்.*

*சூஃபி மரபிலும், ஜலாலுத்தின் ரூமி, சா அதி, ஃபரித்துத்தின் அத்தர், இமாம் கஸ்ஸலி, உமர்கய்யாம், முல்லா நஸ்ருத்தீன், அல்ஹல்லாஜ் என்ற பிரசித்தமான பெயர்களுண்டு. காதிரிய்யா, நக்ஷபந்த், ரிபாயிய்யா, கலந்தர்கள், ருப்ரவிய்யா என்று சூஃபி இயக்கங்களிலும் பல பிரிவுகள் உண்டு.*

*சூஃபிகளின் செயல்பாடுகள் ஒரே தன்மையுடன் இருந்ததில்லை. தாங்கள் வாழ்ந்த நாட்டின் அரசியல் வரலாற்று நிலைகளை அனுசரித்தே அவர்களின்*



நடவடிக்கைகள் வெளிப்பட்டிருக்கின்றன. மத குருக்கள், கலிபாக்களின் அரசியல் அதிகாரம் எட்டாத பகுதிகளில் வாழ்ந்த சூஃபிகளால் தங்களது கருத்துக்களை தைரியமாக, தங்கு தடையின்றி வெளிப்படுத்த முடிந்திருக்கிறது.

முல்லாக்களின் செல்வாக்குப் பாயாத, ஈரானின் வடக்கிலிருக்கும் பிரதேசமான குராசான் போன்ற பகுதிகளில் புழங்கிய சூஃபிகளால், "சூஃபிகள் உறையும் சத்திரத்துக்கு வருபவர்களின் நம்பிக்கையை கேள்வி கேட்காதே, அவர்களுக்கு ரொட்டித் துண்டுகளைக் கொடுங்கள்" என்று தைரியமாக தங்கள் கருத்தினைச் சொல்ல முடிந்திருக்கிறது.

ஆனால், ஈரானுக்குத் தென்மேற்காக இருக்கும் பாக்தாத் போன்ற அரசதிகாரம் அதிகம் குவிந்த நகரில் வாழ்ந்த ஜீனைத் போன்ற சூஃபிகளால், "சூஃபிகளின் சத்திரத்திற்கு வருபவர்களின் நம்பிக்கையை முதலில் பரிசோதியுங்கள். பின்பு, ஏற்றுக்கொள்ள முடிந்தால் மட்டும் அவர்களை அனுமதியுங்கள்" என்ற எச்சரிக்கையுடன்தான் பேச முடிந்தது என்று சூஃபிகளின் வரலாற்றை விரிவாக ஆய்வு செய்த ஜாவத் நூர்பக்ஷ் என்ற அறிஞர், சூஃபிகளின் வேறுபட்ட தன்மைகளுக்கு விளக்கம் தருகிறார்.

குர்ஆனின் இறை வசனங்களுக்கு அதன் வெளிப்படையான நேரிடைப் பொருள் தாண்டி, ஆழமான அர்த்தங்கள் உண்டு எனச் சுட்டுபவர்களாக சூஃபிகள் இருந்திருக்கின்றனர். இறைவனை அடைய மேற்கொள்ளப்படும் பல வழிகளில், உள்ளோடும் சரடு ஒன்றே என்று செயல்பட்டிருக்கிறார்கள் சூஃபிகள். புற அடையாளங்களைப் பற்றி அதிகம் கவலைப்படாதவர்களாக, வித்தியாசங்களைக் கறாராகப் பின்பற்றாமல், அதன் இறுக்கம் தளர்த்துபவர்களாக, பிற நம்பிக்கைகளி ன்மீது அதிகம் சகிப்புத் தன்மை கொண்டவர்களாக சூஃபிகள் இருந்திருக்கின்றனர்.

இதற்குப் பல ஆதாரங்கள் உண்டு. பெருங் கவியான ஜலாலுத்தின் ரூமியின் (1207–1273) உச்சரிப்புகள்; "கோதுமையை அள்ளு, அதைக் கொண்டிருக்கும் கொள்கலனைப் பார்க்காதே", "பாத்திரத்தை வணங்குவதை விட்டு, எப்போது அதனுள் இருக்கும் நீரைப் பார்க்கத் தயாராவீர்கள்", "நான் கிறிஸ்துவனுமல்ல, யூதனுமல்ல, ஜொராஸ்டிரியனுமல்ல அல்லது முஸ்லிமுமல்ல இப்படி என்னை நானே அடையாளம் கண்டுகொள்ளாதபோது என்ன செய்யலாம்? ஓ முஸ்லிம்களே."

இப்னுஎல்அரபி (1165–1240) என்ற ஸ்பானிய நாட்டு சூஃபி சொன்னது: "என் இருதயம் எல்லா வடிவங்களையும் உள்வாங்குவதற்கு ஏற்றதாயிருக்கிறது. கிறிஸ்துவத் துறவிகளுக்கான மடமாயிருக்கிறது, விக்கிரகங்களுக்கான ஆலயமாயிருக்கிறது. புனித யாத்திரிகர்களுக்கான கஅபாவாயிருக்கிறது, யூதர்களுக்கான தோரா வேதமாயிருக்கிறது. குர்ஆனுக்கான இடமாகவும் இருக்கிறது."

பாக்தாத்தைச் சேர்ந்த சூஃபி மகானான சாரி சக்காத்தி (கிபி 875) என்பவர் வெளிப்புற அடையாளங்களை மட்டும் பேணுவதில் காட்டும் சிரத்தையின் போதாமையைப் பற்றி விமர்சித்திருக்கிறார். 'தாடி வணக்கத்தைப்' பற்றி சக்காத்தி சொன்னது

சூஃபிக்கள் உலகில் வெகு பிரசித்தம். தாடி வைத்து அதைப் பராமரிப்பதில் இரு காரணங்கள் செயல்படும். "சமூக நாகரிகத்தைக் கருதி, பிறரின் கண்களை உறுத்தாமல் இருப்பதற் காகதாடியைக் கோதி, சீராக்கி எப்போதும் அதை ஒழுங்காகப் பேண வேண்டும் அல்லது தாடியை நீளமான சடையாக வளர விட்டு ஓர் துறவியின் தோற்றத்தை உலகத்துக்குத் தரலாம். என்னைப் பார்க்க வருகையாளர் யாராவது வரும் சமயத்தில் வந்த வரை தயவு பண்ணுவதற்காக, என் தாடியை நான் கோதி வருடினால் என் பார்வையில் நானே, என் தாடியை பூஜிப்பவனாக, ஆராதிப்பவனாக ஆகிவிடுகிறேன்."

அதீத ஞானப் பரவச நிலையில் தீவிரமான வார்த்தைத் தெறிப்புகளையும் சூஃபிகள் உச்சரித்திருக்கின்றனர். "நானே உண்மை அனல் ஹக்" என்று மன்சூர் இப்னு ஹல்லாஜ் (கிபி 857) என்ற சூஃபி சொன்னது பிரசித்தமானது.

பயாசித் பிஸ்தமி (கிபி 875) என்ற சூஃபியும், "பல வருடங்களாக கஅபாவை நான் சுற்றிக்கொண்டிருந்தேன், இப்போது கஅபா என்னைச் சுற்றுகிறது" என்று சொல்லியிருக்கிறார். இதையொட்டி, ஜலாலுத்தின் ரூமி சூஃபிகளுக்கு எழுதிய 'ஃபிஹி மா ஃபிஹி' - 'அதனுள்ளே என்ன இருக்கிறது' என்ற நூலில் மூன்று விதமான வணக்க நிலைகளைக் குறிப்பிடுவார். முதல் நிலையில், மனிதன், மரம் செடி கொடிகள், பூமி, கல், பணம், அதிகாரம், தான் சார்ந்திருக்கும் பிரிவு, கட்சி என்று எல்லாவற்றையும் வணங்குவான்.

இரண்டாம் நிலையில், மனிதன் கடவுளை வணங்குவான். படித்தரம் உயர்ந்த மூன்றாம் நிலையில், "நான் கடவுளை வணங்குகிறேன் என்றோ; நான் கடவுளை வணங்க மாட்டேன் என்றோ அவன் சொல்வதில்லை."

சூஃபி மரபில் சில பிரிவினர், ஞானப் பரவச நிலையை அடைவதற்கு ஓலமிடுதலையும் இசையையும் பாடல்கள் பாடுவதையும் பாடலோடு நளினமான உடலசைவினையும் உள்ளடக்கிய 'சமா' என்ற



நிகழ்வினைக் கைக்கொள்ளலாம் என சிபாரிசு செய்திருக்கின்றனர்.

இமாம் கஸ்ஸலலி, ஹல்லாஜ் போன்றோர் ஆளுமை பக்குவம் கொண்டவர்களே 'சமாவில்' பங்கெடுத்துக்கொள்ளலாம் என வரையறை செய்திருக்கின்றனர்.

சூஃபிகளின் சுதந்திரமான போக்கு, குறுகிய வட்டத்துக்குள் உழலாமை, உடைமைகளை அதிகளவில் சேகரித்து வைத்துக்கொள்ளாத எளிய குணம், விசாரித்தறியச் சொல்லும் ஆய்வு மனத்தை ஊக்குவித்தல், அதிகாரமற்றவர்களின், பலவீனமானவர்களின் பக்கம் சார்பு, மனித உரிமைகளுக்காக முன் நிற்கும் பண்பு போன்ற மதிப்பீடுகளில் தோய்ந்த சூஃபிகளின் வாழ்க்கை, அதிகாரத்தை ருசித்துக்கொண்டிருந்த, உலக சௌகரியங்கள் தேவைப்பட்டுக் கொண்டிருந்த, மன விசாலமில்லாத சில மார்க்க அறிஞர்களைக் கோபப்படுத்தியிருக்கிறது.

இத்தனைக்கும் சூஃபிகள் தங்களின் போதனைகளை பகிரங்கப்படுத்துவதில்லை. தேர்ந்தெடுக்கப்பட்ட பக்குவமான நிலையிலுள்ளவர்களிடம் தான் தங்களைப் பகிர்ந்துகொள்வார்கள்.

சூஃபிகள், தாங்கள் வெளிப்படுத்த விரும்பும் கருத்துக்கள் சுலபமாக மலினப்படுத்தப்பட்டுவிடலாம், வறட்டுத்தனமாகக் குறுக்கப்பட்டு விடலாம் என்ற எச்சரிக்கையுணர்வுடன்தான் செயல்பட்டு வந்தனர். அப்படியிருந்தும் சூஃபிகள் சிரமத்திற்குள்ளாக வேண்டியிருந்தது. இப்னு அல் அரபிக்கு நேர்ந்ததெல்லாம் ஞான வெளிப்பாடல்ல, அவரது அகத்துணர்ச்சிகளே என்ற விமர்சனம் எழுந்தது. தன் பாடல்களுக்கு உள்ளர்த்தங்கள் உண்டு என்று இப்னு அரபி உரை எழுதிய போதுதான் மார்க்க அறிஞர்கள் அவரை ஒப்பினார்கள். ஆனால் ஹால்லாஜினால் தப்ப இயலவில்லை. அவர் மரணத்தைத் தழுவ வேண்டியிருந்தது. அவர் மீது வாசிக்கப்பட்ட புகார்கள் எல்லா உண்மையான மதங்களுக்கும் உள்ளுறையும் சாரம் ஒன்றே என்று சொன்னது. இயேசுவையும் ஓர் சூஃபி மகானாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று அவர் சொன்னதினால், அவர் ரகசியமாக கிறிஸ்துவ மதத்தை வழிபடுகிறார் என்ற குற்றச்சாட்டு.

மக்காவுக்குப் போகும் புனித யாத்திரையை, ஆன்மிக நிலையில் ஒருவர் தன்னை அர்ப்பண உணர்வுடன் மேம்படுத்திக் கொள்வதன் மூலம் எங்கும் நிறைவேற்றிக் கொள்ளலாம் என்று அறிவித்தது. நேர்த்தியான வேலைப்பாடுடன் கூடிய பல புத்தங்களை வீட்டில் வைத்திருந்தார் என்பதும் அவர் மேல் ஓர் குற்றச்சாட்டாக இருந்தது.

மார்ச் 26, செவ்வாய் 922ஆம் ஆண்டு கலிபா அல் முக்தாதிரிலனால் ஹல்லாஜ்க்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. கொடுமையான சித்திரவதை

செய்யப்பட்டு, மரண வாயிலில் நின்ற போதும் ஹல்லாஜ் பண்ணிய பிரார்த்தனை: "பிறர் அறியாத பல பிரபஞ்ச ரகசியங்களை நான் அறியும் படியாக வைத்த உனது பேரருளுக்கு நான் நன்றியுடையவனாக இருக்குமாறு என்னை ஆக்கு. புறம்பானவை என்று கருதப்படும் புனித ரகசியங்கள் எனக்கு அந்நியமாய் இல்லாதிருக்கின்றன. என்னைக் கொல்வதற்காகக் கூடியிருக்கும் இம் மக்களை மன்னித்து அவர்கள் மீது கருணை காட்டு. எனக்குக் காட்டப்பட்டவை அவர்களுக்கும் காட்டப்பட்டிருந்தால் அவர்கள் இப்படி நடக்க மாட்டார்கள்."




தமிழகத்திலும் சூஃபி ஞானியான தக்கலை பீர் முகம்மது அப்பாவும் தனது வாழ்நாளில் சில சங்கடங்களை தன்னைச் சுற்றியிருந்தவர்களால் சந்தித்ததாக வழக்குண்டு. மார்க்க அனுஷ்டானங்களைப் பேணாதவர் என்று பீர் முகம்மது அப்பாவின் மேல் அவ நம்பிக்கை கொண்டனர் அவர் ஊர் மக்கள். மகான் சதக்கத்துல்லா அப்பா, ஊர் மக்களைக் கூட்டிக்கொண்டு போய் ஞானி பீர் முகம்மது அவர்கள் தறி நெய்துகொண்டிருந்த குழிக்குள் பார்த்தபோது, அதில் மக்கா நகரில் நபிகள் தலைமையில் பிரார்த்தனை நடந்துகொண்டிருந்த நிலையில், முதல் வரிசையில் பீர் முகம்மது அவர்கள் நின்று தொழும் அற்புதக் காட்சியை ஊர் மக்கள் கண்டனர். பின்பு வாயடைத்துப் போயினர். இது சூஃபிகளின் வரலாற்றில் ஒரு பக்கம்தான்.

"நீங்கள் மரணிப்பதற்கு முன்பே மரணித்து விடுங்கள்" என்ற நபி மொழியினைச் சுமந்து சென்ற சூஃபிகள் அனைவரும் துயரமான, சங்கடமான முடிவினைச் சந்தித்துவிடவில்லை, வளமான பக்கங்களும் உண்டு. 12, 13ஆம் நூற்றாண்டுகளில் எகிப்து, சிரியா நாடுகளில் அடிமைகள் உருவாக்கிய மம்லுக் பேரரசின் கீழ், சூஃபிகள் உறையும் சத்திரங்கள் அரசாண்ட சுல்தான்களின் நிதியுதவியுடன் பெருவாரியாகக் கட்டப்பட்டன. அங்கு இஸ்லாமிய மார்க்க சட்ட திட்டங்களுடன் சேர்த்து, சூஃபி பயிற்சி முறைகளும் போதிக்கப்பட்டன. வழக்கமான தொழுகையும் அங்கு நடத்தப்பட்டன என்பதற்கு இஸ்லாமிய வரலாற்றாய்வாளர்கள் சான்றுகள் தருகின்றனர்.

அல் ஹரனி (1565) என்ற எகிப்திய சூஃபி, இப்னு எல் அரபியின் முக்கிய நூலான 'அல் புத்துகத் அல் மக்கியா' என்ற நூலுக்கு எழுதிய எளிய உரை வெகு ஜனங்கள் மத்தியில் பிரபலமடைந்து மிகுந்த செல்வாக்கும் பெற்றிருக்கிறது. ரூமியின் மரண ஊர்வலத்தின் போது, வித்தியாசங்கள் கடந்து, முஸ்லிம்களுடன் சேர்ந்து கிறிஸ்துவர்களும் யூதர்களும் தங்களது புனித நூல்களைச் சுமந்து கொண்டு, "நாங்கள் ரூமியைக் காணும்போது ஜீஸஸ், மோசஸ் மற்றும் அனைத்து தீர்க்க தரிசிகளின் உண்மையான தன்மையைப் புரிந்துகொண்டோம்" என்று பெருவாரியாக புலம்பிக் கொண்டு சென்றிருக்கிறார்கள்.

சந்தேகம் கொள்ளுதலே அறிவுப் பொக்கிஷத்திற்கான திறவுகோல். சந்தேகம் கொள்ளாதவர் எதையும் பரிசீலிப்பதில்லை. பரிசீலிக்காதவர்கள் விஷயங்களின் தன்மைகளைப் பற்றி எதையும் தெளிவாக அறிந்துகொள்ளப் போவதில்லை. அப்படி அறியாதவர்கள் குருடர்களாகவே இருப்பர் என்று விசாரணை செய்யும் தத்துவ மனத்திற்குத் தேவையான அடிப்படையைச் சொன்னவர்கள் சூஃபிகள்.

சூஃபிகளின் கதைகளும் உரையாடல் துணுக்குகளும் கவிதைகளும் நம்பிக்கைகளால் இறுகிப்போன இயந்திரமான எண்ண ஓட்டத்தில் சலனத்தை, ஓர் அழிப்பை, பிரகாசத்தை உண்டாக்க உருவாக்கப்பட்டவை.

ஜாலாலுத்தீன் ரூமியின் கவிதை:
ஒருவன் தனக்கு நேசமானவளின்
வீட்டிற்குப் போய்க் கதவைத் தட்டினான்.
"யாரது, வெளியே?" என்று
உள்ளிருந்து குரல் வந்தது.
"நான்தான்" என்றான் வந்தவன்.
"உனக்கும் எனக்கும் இங்கு இடமில்லை"
குரல் பதில் சொன்னது.
சில வருடங்கள் கழித்து,
தனிமையும் துயரமும்
அலைக்கழித்த பிறகு
பழையபடி போய்க்
கதவைத் தட்டினான் அவன்.
"யாரது?"என்றது குரல்.
"நீதான்" என்றான் அவன்.
கதவு திறந்தது.
உள்ளே போனான் அவன்.

அன்பின் உச்சத்தில் சுயம் பிறர் என்ற பாகுபாடு கரைவதாகச் சொன்னாலும் அன்பின் அடியில் இழையோடும் வன்மத்தினையும் சூஃபிகள் கணக்கிலெடுத்துக் கொண்டுள்ளனர்.

பிறர் எதிரியாகும் போது, 'அது' அழிவைச் சந்திக்க வேண்டும் என்று மனம் ஆசைப்படும் தருணத்தை, கனவைப் பொருட்படுத்தி "உன்னைப் போலவே

அண்டை வீட்டானையும் நேசி" என்பதற்கு எதிர் நிலையான "பிறர்க்கு என்ன ஆசைப்படுவாயோ அதையே உனக்கும் ஆசைப்படு" என்கிறது சூஃபியிசம்.

எதிரி சாக வரம் வேண்டும், என்று கேட்கும் நாட்டார் கதைப் பாடல்களும் காதலின் உறவு நெருக்கடிகளை, வன்மத்தைச் சொல்லும் தஸ்தயேவ்ஸ்கியின் இலக்கியப் படைப்புகளும் தீவிரமான மனப் பிறழ்வில் 'பிறர்' குறித்துத் தோன்றும் எதிர்மறை எண்ணங்களும் அந்நிலையில் மட்டற்றுப் பெருகும் 'கெட்ட'வார்த்தைகளுமே, உக்கிரமான நடவடிக்கைகளுமே இதற்கு நிரூபணங்கள்.

கற்பனை பிரேமையில் விளைந்த, சுயேச்சையாக ஆளுமைக்குள் ஓடும் பிறழ்வான எண்ண ஓட்டங்களை அங்கீகரித்து, அதனைப் பரிச்சயப்படுத்தி, பகுத்தறிவின் தளத்துக்குக் கொண்டு வருவது மனநல சிகிச்சையின் ஓர் அங்கம். அந்த வேலையைச் செய்வன சூஃபி கதைகள்.

ஒரு கதையில், முல்லா நஸ்ருத்தீன் மீன் பிடிக்க வலையை எடுத்துக்கொண்டு மீனவர்களுடன் கடற்கரைக்குப் போவார். அங்கு போனவுடன் வலையை வீசி அதற்குள் துள்ளி விழுந்து கொள்வார் முல்லா.

"வலைக்குள் என்ன பண்ணுகிறீர், முல்லா?" என்று மீனவர்கள் கேட்பர்.

"என்னை ஒரு மீனாகக் கற்பனை பண்ணிக் கொள்கிறேன்" என்பார் முல்லா.

மனநல காப்பகத்துக்குள் ஒருவர் உள்ளே போனால் "நான் கடவுள்" என்றோ "நானே முதல் மந்திரி" என்றோ சொல்லிக்கொண்டு, தொண்டர்கள் கூட்டம் தேவைப்படாமல் தனியாகச் சுற்றித் திரிபவர்களைச் சுலபமாகச் சந்திக்கலாம். அப்படி ஆசையானது சுய நிச்சயத்துடன் உறுதிப்பட்டு, அது நடவடிக்கையாக மாறாமல், "நான் மீனாகக் கற்பனை பண்ணிக்கொள்கிறேன்" என்று சொல்லி ஆசைக்கும் எதார்த்தத்துக்கும் இடையே மெல்லிய திரையைக் கொண்டு வரும் வேலையைச் செய்பவை சூஃபி கதைகள். சில சமயங்களில், வெளியுலகப் போக்கைப் பார்க்கும்போது மனநலக் காப்பகமே தேவலாம் என்ற உணர்வையும் தோற்றுவிப்பவை சூஃபி கதைகள்.

மக்காவில் நிகழ்த்தப்பட்ட பேருரையின் சாராம்சத்தினையொட்டி அமெரிக்க கறுப்பர்களின் அரசியல் வரலாற்றில் முழங்கப்பட்ட எதிர்ப்புக் குரல் ஒன்று நினைவுக்கு வருவதைத் தவிர்க்க முடியவில்லை.

மதத்துக்குள்ளிருந்து, "தேவைப்படும் எவ்வழியைக் கைக்கொண்டும் சுதந்திரம்" என்று, சமூக மாற்றத்திற்காக எழுந்த அந்த ஆவேசக் குரல் மால்கம் எக்ஸினுடையது.

மக்காவிற்கு மால்கம் எக்ஸ் புனிதப் பயணம் மேற்கொண்டது அவருள் ஆழ்ந்த மாற்றத்தினை ஏற்படுத்தியது. கறுப்பு முஸ்லிம்களின் பிரச்சினைகளைப் பற்றி மட்டும் பேசிக்கொண்டிருந்த அவரின் அரசியல் நடவடிக்கைகளின் எல்லையை விரித்தது அப்பயணம். அப் பயணத்திற்குப் பின்பு, சர்வதேச ஆப்பிரிக்க அமெரிக்கர்களின் பிரச்சினைகளைத் தொட்டுப் பேசுவதாகவும் தனது கருத்து நிலைகளுக்கு ஆதரவு தரும் வெள்ளையர்களை விலக்காத போக்கைக் கொண்டதாகவும் மால்கம் எக்ஸின் பார்வை விசாலமானது.

மால்கம் எக்ஸ் தனக்குள் நிகழ்ந்த ஆழமான 'மறுபிறப்பு' பற்றி தனது குடும்பத்துக்கும் தொண்டர்களுக்கும் சொன்னது: "மக்கா நகரில் எல்லா உயிர்களையும் படைத்தவனின் முன்னிலையில் நிற்கும்போது, நான் பூமியில் இருந்த முப்பத்து ஒன்பது வருடங்களில் முதன்முதலாக பரிபூர்ணமான மனிதனாக உணர்ந்தேன்."

அமெரிக்கா இஸ்லாத்தைப் புரிந்துகொள்ள வேண்டும். ஏனென்றால் அமெரிக்க சமூகத்திலிருந்து நிறவெறிப் பிரச்சினையை அழிக்கக் கூடிய ஓர் மதம் இஸ்லாமாகும். வெள்ளை அமெரிக்கர்கள், ஏக இறைவனின் ஒருமையை ஏற்றுக்கொண்டுவிட்டால், இஸ்லாத்தின் கொள்கைகளை ஏற்றுக்கொண்டு விட்டால், ஸ்தூலமான எதார்த்த வாழ்க்கையிலும் அவர்கள் மனிதனின் சுயமதிப்பை ஏற்றுக்கொள்ளக்கூடும். அதனால் நிற வித்தியாசத்தினால், வெள்ளையர்கள் பிறரை மதிப்பிடுவதை, கட்டுப்படுத்துவதை, துன்புறுத்துவதை நிறுத்தலாம்.

மக்கள் ஒருவருக்கொருவர், தோலின் நிறத்தைக் கணக்கில் கொள்ளாமல் சகோதர, சகோதரியாக அங்கீகரித்துக்கொண்டு விடுவர். மக்காவிலிருந்து வந்த பிறகு மால்கம் எக்ஸ் சொன்னது: "நான் இனவெறி கொண்டவனல்ல. மக்கா பயணத்தின் போது எனக்குக் கிடைத்த நல்லாசீர்வாதத்தினால், நான் பெற்ற ஆன்மிக மாற்றத்தினால் ஓர் இனத்தின் குறைகளுக்கு மட்டும் நான் உடன்பட்டவனல்ல. நான் உண்மையுடனும் நேர்மையுடனும் சொல்லிக்கொள்ள விழைவது, சுதந்திரம், நீதி, சமத்துவம், வாழ்க்கை, விடுதலை, மகிழ்ச்சிக்கான தேட்டம் இவை எல்லா மக்களுக்கும் கிடைத்திட விழைகிறேன்.

என் முதல் அக்கறை நான் சார்ந்திருக்கும் மக்களான ஆப்பிரிக்க அமெரிக்கர்களைப் பற்றியது. ஏனென்றால், அவர்கள்தான் மற்றவர்களைவிட அடிப்படை உரிமைகளை அதிகம் இழந்துள்ளார்கள்."

இக் கதைகள், சூஃபி இலக்கியங்களில் விசாலமான ஆய்வுகள் பண்ணிய இத்ரிஸ் ஷா என்பவரின் ஆங்கில நூல்களிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டவை.

*mail to:* **safipsy69@gmail.com**

*சூஃபி கதைகள் - நூலுக்கு எழுதிய முன்னுரை,*
*வெளியீடு: உயிர்மை பதிப்பகம்*

# கனவு

'நான் கனவு காண்கின்றேனா அல்லது நான் இன்னொருவருடைய கனவில் வரும் பாத்திரமா?'



• இந்திரா பார்த்தசாரதி
ஓவியம்: ஃபியோனா ஸ்மித்

**'ஆ**லிஸின் அதிசிய உலகம்'. காலையில் 'வாக்கிங்' போகும்போது ஒரு காட்சியைக் கண்டேன். கையில் 'காமிரா' இருந்திருந்தால், படம் பிடித்திருப்பேன்.

இருள் பிரிந்தும் பிரியாத விடியற்காலை. ஒருவன் ஒரு வீட்டுச் சுவரோரத்தில், ஒரு மரத்தருகே நின்றுகொண்டு சிறுநீர் கழித்துக் கொண்டிருந்தான். அவன் கையில் பிடித்திருந்த 'லீஷி'ல் ஒரு நாய். தெருவை வேடிக்கைப் பார்த்தவாறு சாவகாசமாய் நின்று கொண்டிருந்தது. அப்பொழுது அந்தப் பக்கம் வந்த இன்னொரு நாய், அதன் அருகே நின்று 'குசலம்' விசாரிக்கத் தொடங்கியது. சாதரணமாக, நாய் மரத்தருகே சிறுநாய் கழிப்பதும் அதைப் பிடித்துக் கொண்டிருக்கும் மனிதன், அந்தப் பக்கம் வரும் சிநேகிதனுடன் பேசிக்கொண்டு நிற்பதும் இயல்பான காட்சி.

ஆனால், , இது வித்தியாசமாக இருந்தது. நாய் மனிதனை' லீஷி'ல் பிடித்துக்கொண்டு உலா வந்திருக்கிறதா அல்லது மனிதன் நாயைப் பிடித்துக்கொண்டு வந்தானா என்ற 'தோற்ற மயக்க' உணர்வா அல்லது 'கனவா' தெரியவில்லை எனக்குள் ஏற்பட்டது.

மனிதனுக்கும் மிருகத்துக்கும் உள்ள வித்தியாசம், மனிதனால்தான், தூக்கத்திலும் விழிப்பு நிலையிலும் கனவு காண முடியும், மிருகங்களுக்கு இது சாத்தியமில்லை என்று நான் சில ஆண்டுகளுக்கு முன்பு வரை நினைத்துக் கொண்டிருந்தேன். பிறகு, டால்ஃபின்களும் மனிதக் குரங்குகளும் (Primates) கூட சிக்கலான கனவுகளைக் காண முடியுமென்று விஞ்ஞானிகள் நிரூபித்தார்கள்.

சமீபத்தில், எலிகளாலும் அவர்களுடைய விழிப்பு நிலை அநுபவங்களை, உறங்கும்போது கனவுகளாகக் காண முடியுமென்று அமெரிக்கா எம்.ஐ.டி யைச் சேர்ந்த டாக்டர் மாத்யூ வில்ஸன், கென்வே லூயி என்கிற இரண்டு விஞ்ஞானிகள் கண்டு பிடித்திருக்கிறார்கள். எலி தான் பகலில் பூனையிடமிருந்து சாகசமாகத் தப்பியதைக் கனவு காணலாம், 'மிக்கி மௌஸ்' போல.

ஆகவே, பல விஷயங்களில், மனிதனுக்கும் மிருகத்துக்குமிடையே உள்ள இடைவெளி குறைந்துகொண்டே வருகிறது. ஒரு வேளை, மிருகம் மனிதனாகவும் மனிதன் மிருகமாகவும் மாறிக்கொண்டு வரலாம்.நமது தொலைக் காட்சி செய்திகளையும் என்னுடைய 'வாகிங்' அனுபவத்தையும் வைத்துப் பார்க்கும்போது, இரண்டாவதுதான் நடந்துகொண்டு வருகிறதோ என்று எண்ணத் தோன்றுகிறது.

கனவுக்கும் காதலுக்கும் நெருங்கிய உறவு உண்டு. 'கனவு நிலை உரைத்தல்' என்று வள்ளுவரே ஓர் அதிகாரம் காமத்துப் பாலில் பாடியிருக்கிறார். தலைவிக்கு நனவைக் (யதார்த்தம்) காட்டிலும் கனவே பிடித்திருக்கிறது. காரணம், கனவில் வரும் காதலன் அவளை விட்டுப் பிரிவதில்லை. யதார்த்தத்தில் பிரிகிறான். ஆகவே, 'நனவென்ற ஒரு பாவி' என்று பரிமேலழகர் உரை எழுதுகிறார்; வள்ளுவர் பிறிதோரிடத்தில், 'அழுக்காறு (பொறாமை) எனவொரு பாவி' என்று கூறியிருப்பது போல. கனவில் அவன் வந்தால் போதும், நனவில் வர வேண்டாம் என்றும் இருக்கலாம்! இது அவன் காதலனா அல்லது கணவனா என்பதைப் பொறுத்த விஷயம்.



பொதுவாகவே, யதார்த்தத்தைக் காட்டிலும், கற்பனையும் கனவுகளும்தான் கவிஞர்களுக்கு இன்பம் தர வல்லன. யதார்த்தத்துக்கு காலம், இடம், சமூக நியதி போன்ற வரையறைகளும் கட்டுப்பாடுகளும் இருப்பதினால், சிறை விரித்து எல்லையற்ற கற்பனைப் பெருவெளியில், மனத்தடைகளின்றிப் பறக்க இயலாது. கனவில் இது சாத்தியம். நம் உள் மனத்தில், யதார்த்தமென்ற ஒரு பாவியினால், தடைகளுக்கு உட்பட்டிருக்கும் வரம்பற்ற ஆசைகளும் ஆதங்கங்களும் கனவு நிலையில் விழித்தெழுகின்றன. உடம்பு உறங்குகின்றது. உள்மனத்துக்கு ஓய்வில்லை.

'யதார்த்தத்தில், சமூக நியதியின் காரணமாக, மனிதன் தன்னுடைய இயல்பான ஆசைகளையும் எண்ணங்களையும் அடக்கிக்கொள்ள வேண்டியிருக்கிறது; அடக்கப்பட்ட உணர்வுகள் உறக்கத்தின்போது தங்களைப் பலவிதமான குறியீடுகள் மூலம் அறிவித்துக் கொள்கின்றன. இவைகள்தாம் கனவுகள். இவற்றின் ஆதாரத் தாயகம், பாலுணர்வு (sex) என்று சிக்மென்ட் ஃப்ராய்ட் கூறுகிறார்.

ஆனால், அவருடைய ஒரு காலத்திய சிஷ்யர், கார்ல் யூங் கருத்தின்படி,'தொடர்ந்து வரும் ஒரு சமூக மரபுப் பிரக்ஞையின் வெளியீடுகளாகிய தொன்மங்களின் (myths) குறியீட்டு (symbolic) நினைவுகளாகவும் கனவுகள் இருக்கக் கூடும்' என்பதுதான். 'A dream is one's private myth and a myth is a public dream' என்கிறார் அவர்.

உதாரணமாக, சமூக நாடோடிக் கதையாக வழங்கும் 'ஜெகதலப் பிரதாபன்' வரலாற்றில், ஜெகதலப் பிரதாபன் ஒடுக்கப்பட்ட ஓர் இனத்தில் பிறந்த ஏழை இளைஞன். அவன் கனவு காண்கின்றான். என்ன கனவு? 'சொர்க்க உலகில், இந்திரகுமாரி இன்னிசைப் பாட, வருணகுமாரி கால்களை வருட மலர் மஞ்சத்தில் அவன் பள்ளிகொண்டு, வாழ்க்கையை அநுபவிக்க வேண்டும்' என்று. அவன் கனவாகிய அந்தரங்கத் தொன்மம், ஒடுக்கப்பட்ட அனைத்து இளைஞர்களின் கனவுக் குறியீடாக மாறி, தொன்மக் கதையாக உருப் பெறுகிறது. இதுவே அக் குறிப்பிட்ட சமூகத்தின் பகிரங்கக் கனவும் ஆகும்.

கனவு காணப் பெண்களுக்கும் உரிமை உண்டு என்பது போல, பாகவதத்தில் ஓர் அசுரப் பெண்ணும் கனவு காண்கின்றாள். பாணாஸ்வரனின் மகள் உஷா. ஓர் அழகிய இளைஞன் அவள் கனவில் வருகின்றான். அவன் கிருஷ்ணனுடைய பேரன் அநிருத்தன். பிரத்யுமனனின் மகன். அநிருத்தன்மீது காதல் கொள்கின்றாள் உஷா.

அநிருத்தன் தூங்கும்போது, அவன் கனவில் புகுந்து, அவனைக் கடத்திக்கொண்டு வந்து விடுகிறாள் அவள் தோழி சித்திரலேகா. பின் நவீனத்துவக் கதைகள் பாகவதத்திலிருந்துதான் தொடங்கியிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

தமிழ்ப் பெண் ஒருத்தியும் கனவு காண்கின்றாள். அவள் கனவு பேரனைப் பற்றியதன்று; தாத்தாவைப் பற்றியது. அந்தத் தாத்தாவின் விசேஷம் என்னவென்றால் அவர் என்றும் இளைஞன்! அவன்தான் கிருஷ்ணன். அவனை மணமகனாக வரித்து, அவனுடன் திருமணம் செய்துகொள்வதாகக் கனவு கண்டவள், சூடிக் கொடுத்த நாச்சியார் என்றறியப்படும் ஆண்டாள். ஒரு திருமணப் பெருவிழா, இந்தக் காலத்து வீடியோ படக் காட்சிகள் போல், ஆண்டாளின் மனக்கண் முன், கனவாக விரிகின்றது.



நடக்க இருக்கும் திருமணத்தை முன் கூட்டியே அறிவிக்கின்றது இக்கனவு.

கம்ப ராமாயணத்தில் அசோக வனத்தில் சிறையிருந்த சீதையின் துயரைப் போக்க, தான் கண்ட கனவை அவளுடன் பகிர்ந்துகொள்கிறாள் திரிசடை என்ற ஒரு பெண். வால்மீகி ராமாயணத்திலும் திரிசடை வருகின்றாள். ஆனால், அவளை ஒரு வயதான அரக்கியாகக் காட்டி, அவள் தன் கனவை மற்றைய அரக்கிகளுடன் பகிர்ந்துகொள்வதாகச் சொல்லுகிறார் வால்மீகி. கம்பனின் இலக்கிய மந்திரக் கோல் அவளை விபீஷணனின் மகளாகவும் சீதையின் உற்ற தோழியாகவும் காட்டுகிறது. அவள் சித்திரிக்கும் அவள் கனவு, சீதையின் வேதனையைத் தீர்க்கும் மாய மந்திரமாக ஆகிவிடுகின்றது!

ஷேக்ஸ்பியர் நாடகங்களில், கனவுகள் ஒரு முக்கிய பங்கை வகிக்கின்றன. ஜூலியஸ் ஸீஸரில், ஸீஸரை செனட் கூட்டத்துக்குப் போக வேண்டாமென்று தடுக்கிறாள் அவன் மனைவி கலிஃபூர்னியா. காரணம், அவள் முதல் நாளிரவு தீக்கனா காண்கின்றாள். அவன், அவள் சொல்வதை மீறிச் செல்கிறான். கொல்லப்படுகிறான். கொடுங்கோல் மன்னனாகக் காட்டப்படும் மூன்றாம் ரிச்சர்ட் போரில் கொல்லப்படுவதற்கு முன்னால் அவன் காணும் கனவில், அவன் கொன்ற அனைவரும் வரிசையாக வருகிறார்கள்.

பண்டைய கிரேக்கக் கதைகளில், நிக்ஸ் என்ற இரவின் தெய்வம், ஹிப்னாஸ் (உறக்கம்), தனடோஸ் (மரணம்) என்ற இரட்டைப் பிள்ளைகளை ஈன்றெடுப்பதாகக் கூறப்படுகின்றது. ஹிப்னோஸ், மார்ஃபியஸ் என்ற கனவுகளுக்குரிய பெண்ணின் தந்தையாகக் குறிப்பிடப்படுகிறார். இந்தப் பெண்ணைச் சூழ்ந்திருப்பவை அபின் செடிகள்! கனவுக்கும் அபினுக்கும் உள்ள சம்பந்தத்தை இது காட்டுகிறது!

உறக்கத்தையும் மரணத்தையும் இரட்டைக் குழந்தைகளாகக் கூறுவது, இரண்டிற்கும் வேறுபாடு இல்லை என்று சொல்வது போல் இருக்கிறது. 'ஹாம்லெட்'டில், டென்மார்க் இளவரசன் கூறுகிறான்: 'மரணம் எனும் அப்பெரும் தூக்கத்தில் எந்த மாதிரியான கனவுகள் வருமோ, நினைக்கவே பயமாக இருக்கிறது!'

வள்ளுவரின் கருத்தோட்டம் இந்த விஷயத்தில் ஆக்கப் பூர்வமாக (positive) இருப்பதைப் பார்க்கலாம். உறக்கம் > மரணம் > பிறப்பு என்பது அவர் பார்வை. மரணம் ஒரு முடிவன்று. அதைத் தொடர்வது பிறப்பு. இந்நிலையில் அனைத்துமே கனவாகத் தோன்றுவதில் ஆச்சர்யமில்லை... 'நாம் அனைவருமே தூக்கத்தில் முடியப் போகும் கனவுகள்' என்கிறார் ஷேக்ஸ்பியர், இன்னொரு நாடகத்தில்.

அபினுக்கும் கனவுக்குமுள்ள தொடர்பை வலியுறுத்துவது போல், கோல்ரிட்ஜ் என்ற ஆங்கிலக் கவிஞர், 'குப்ளாக்கான்' என்ற ஓர் அற்புதமான கவிதை எழுதியிருக்கிறார். அவரே இக்கவிதை அபின் மயக்கத்தில் எழுதப்பட்ட கவிதை என்பதை ஒப்புக்கொள்கிறார். இக்கவிதை, பாரதியின், 'குயில் பாட்டு'ப் போல, 'பட்டப் பகலில் பாவலர்க்குத் தோன்றுவதாம் 'ஓர் நெட்டைக் கனவு'.

அரசியல் கனவுகளும் இருக்கின்றன. அமெரிக்கக் கறுப்பர்களின் தாரக மந்திரம், 'எனக்கொரு கனவு உண்டு' (I have a dream) என்ற ஒரு கூற்றுதான். மார்ட்டின் லூதர் கிங் (ஜூனியர்) கண்ட இக் கனவு, வெள்ளை மாளிகையில், ஒரு கறுப்பு இனத்தவரை அரியணையில் ஏற்றி வைத்தது.

*mail to:* **parthasarathyindira@gmail.com**

# யுவான் ரூல்போ

● இளங்கோ

## பெத்ரோ பராமோ
(திரைப்படம்)

காப்ரியல் கார்ஸியா மார்க்வெஸ் தொடக்கத்தில் சில நூல்களை எழுதிவிட்டு எழுத்தின் உறங்குநிலைக்குப் போகின்றார். அப்போதுதான் மெக்ஸிக்கோவில் அவர் யுவான் ரூல்ஃபோவின் (Juan Rulfo), 'பெத்ரோ பராமோ' நூலை வாசிக்கின்றார். இந்நூலின் ஈர்ப்பினால் மார்க்வெஸ் அந்த நாவலை ஓர் இரவில் இரண்டுமுறை வாசிக்கின்றார். பிற்காலத்தில் என்னால் முன்னுரை தொடக்கம் இந்நாவலின் இறுதிப் பக்கங்கள் வரை அப்படியோ ஒப்புவிக்க முடியும் என்று மார்க்வெஸ் குறிப்பிட்டிருக்கின்றார். அந்தளவுக்கு மார்க்வெஸ் இந்த நாவலுக்குள் மூழ்கியவர். இந்த நாவல் கொடுத்த பெரும் ஈர்ப்பினால்தான், மார்க்வெஸ் தனது 'நூற்றாண்டு காலத் தனிமை'யை எழுதுகின்றார்.




யுவான் ரூல்ஃபோ 'பெத்ரோ பராமோ'வை 1955இல் எழுதிவிட்டார். நாவலின் கதைசொல்லியான யுவான், இறந்துவிட்ட தனது தாய் சொன்னதிற்கு இணங்க, அவரது தந்தையைத் தேடி கோமாலா நகருக்குச் செல்கின்றார். இதுவரை நேரில் பார்த்திராத தனது தந்தையான பெத்ரோவை, யுவான் பல்வேறு பாத்திரங்களினூடாக அறிகின்றார். பெத்ரோ இப்போது உயிருடன் இல்லை. அவரின் கதை சொல்பவர்களில் பெரும்பாலானோர் கூட இறந்துவிட்டனர். காலமாகியவர்கள் எப்படி கதை சொல்கின்றார்கள், எவ்வாறு யுவனின் வாழ்க்கையில் குறுக்கிடுகின்றார்கள் என்பதுதான் இந்த நாவலின் சுவாரசியமான பகுதிகளாகும்.



இதையே இலத்தீன் அமெரிக்காவில் இருந்து முகிழ்ந்த 'மாய யதார்த்த' கதை சொல்லல் முறைக்கான முதல் புதினம் எனச் சொல்கிறார்கள். இது 120 பக்கங்களுக்குள்ளே அடங்கி விடக்கூடிய ஒரு புனைவு. ஆனால், இவ்வளவு குறுகிய பக்கங்களில் கிட்டத்தட்ட அன்றைய கால மெக்ஸிக்கோவின் நிலவியல், அரசியல், கலாசாரம், புரட்சி எனப் பல விடயங்களைத் தொட்டுச் செல்கின்றது. பெத்ரோ பராமோ வன்முறையின் மூலம் ஒரு நிலச்சுவாந்தர் ஆகின்றார். அவர் காதல் செய்யும் பெண்களும் அவருக்கு ஒரு பொருட்டேயல்ல. அதனால் எண்ணற்ற பெண்களோடு மோகிக்கின்றார். அவர்களை எளிதில் கைவிட்டு தன் வாழ்க்கையில் நகர்ந்தபடியும் இருக்கின்றார்.

இந்த நாவலின் கதைசொல்லியான யுவானே ஒரு தற்செயலான நிகழ்வால் பெத்ரோவிற்குப் பிறக்கின்றவர். மதத்திற்கு எதிரான புரட்சியும் பிறகு அந்தப் புரட்சிக்கெதிரான தேவாலயங்களின் போராட்டமும் நிலப்பிரத்துவ



இறுதிக்கட்டமும் அதிகாரம் எதுவுமற்ற பெண்களின் நிலையும் என பல்வேறு நிகழ்வுகளை பெத்ரோ பராமோ நமக்குக் காட்சிகளாக விரித்துக் காட்டுகின்றது.

இவ்வாறான ஒரு நேர்கோட்டுத் தன்மையில்லாத எழுத்தில் கடந்தகால நினைவுகளும் பேய்களும் பாதாள உலகும் கல்லறைக்குள் இருப்பவர்களும் பேசும் ஒரு நாவலைக் காட்சித் திரையாகக் கொண்டுவருவது அவ்வளவு எளிதல்ல. ஆனால், 'பெத்ரோ பராமோ' திரைப்படத்தில் அவ்வளவு நேர்த்தியாக மாய யதார்த்தமும் குலைந்துவிடாது கொண்டு வந்திருக்கின்றனர். பெத்ரோ பராமோ ஒரு துன்பியல் முடிவை நோக்கிச் செல்கின்ற நாயகனின் கதை என ஓர் எளிமைக்காகச் சொல்லலாம்.

மார்க்வெஸ்ஸின் 'கொலாராக் காலத்தில் காதல்' நாவலில் வருகின்ற நாயகன் 80 வயதுவரை தனது முதல் காதலுக்காகக் காத்திருப்பதைப் போல, 'பெத்ரோ பராமோ'வில் பெத்ரோ தனது பதின்மக் காதலியான சூசனாவுக்காய்க் காத்திருக்கின்றான். அவள் கிட்டத்தட்ட 30 வருடங்களின் பின் பெத்ரோவிடம் திரும்புகின்றபோது அவள் இளமையில் பெத்ரோவை விட்டுச் சென்ற சூசனா அல்ல. அவள் வேறொருத்தியாக,கண்களுக்குத் தெரியாத உருவங்களோடு (இறந்துவிட்ட கணவனோடு) உரையாடும் ஒருத்தியாக இருக்கின்றாள்.

அவளின் வரவோடு பெத்ரோவின் வீழ்ச்சி ஆரம்பிக்கின்றது. தனது காதலி சூசனா இறக்கும்போது அந்தத் துக்கத்தை அசட்டை செய்து, இந்த நகர்

தன்பாட்டில் விழாக் கொண்டாட்டத்தில் திளைக்கின்றதா என பெத்ரோ கோபமுறுகின்றான். அத்தோடு அவன் அந்த ஊரைக் கைவிடத் தொடங்குகின்றான்.

பாழாய்ப்போன ஊரிலிருந்து மறைந்துவிட்ட அந்த ஊரவர்கள் யுவானின் தந்தையை யுவானுக்கு நினைவுபடுத்துவதற்காய் மீண்டும் அந்த நகரிலிருந்து எழுகின்றார்கள். இவர்கள் அசலான மனிதர்கள்தானா என ஒவ்வொருத்தரையும் பார்த்து யுவான் திகைத்து அவர்களைக் கரம்பற்ற விழைகின்றபோது அவர்கள் இறந்துவிட்ட மனிதர்கள் என்பதை அறிகின்றான்.

இறுதியில் கதைசொல்லியான யாவனே காலமாகிவிட்ட ஒருவனாக நமக்குத் தெரிகின்றான். அப்படியாயின் நாம் பெத்ரோ பராமோவில் இறந்துபோன ஆவிகளின் கதைகளைத்தானா கேட்டிருக்கின்றோம்? அவர்களோடுதான் இவ்வளவு நேரமும் உலாவிக் கொண்டிருந்தோமா எனத் திகைக்கவும் செய்கின்றோம்.

## யுவான் ரூல்ஃபோவுடன் நூறு வருடங்கள் (ஆவணப்படம்)

'பெத்ரோ பராமோ' திரைப்படத்தைப் பார்த்தபின், யுவான் ரூல்ஃபோ பற்றிய 'One Hundred Years with Juan Rulfo' என்கின்ற ஆவணப்படமொன்றைப் பார்த்தேன். யுவான், அவரது வாழ்க்கைக்காலத்தில் இரண்டே இரண்டு நூல்களை மட்டுமே வெளியிட்டவர். அவை தமிழிலும் ஏற்கனவே 'பெத்ரோ பரோமா' (குறுநாவல்) எனவும் 'எரியும் சமவெளி' (சிறுகதைகள்) எனவும் மொழியாக்கம் செய்யப்பட்டிருக்கின்றன. இந்த ஆவணப்படம் யுவான் எழுத்தாளர் என்பதற்கு அப்பால் எவ்வாறு மெக்ஸிக்கோவில் வாழ்ந்தார் என்பதை ஓரளவு அடையாளம் காட்ட விழைகின்றது எனச் சொல்லலாம்.

யுவான் மிகச்சிறந்த ஒரு புகைப்படக் கலைஞர். அவர் புகைப்படங்களுக்காய் மெக்ஸிக்கோவின் பல்வேறு நிலப்பரப்புக்களைத் தேடி அலைந்திருக்கின்றார். அத்தோடு அவர் மிகத் துல்லியமாக மெக்ஸிக்கோவின் புவியல் வரைபடத்தை (Map) வரைந்தும் வைத்திருக்கின்றார். இந்த ஆவணப்படத்தில் யுவானின் நண்பரொருவர், 'அந்த வரைபடம் அவ்வளவு நேர்த்தியாக மெக்ஸிக்கன் அரசு வெளியிட்ட வரைபடத்தை விட சிறந்ததாக இருந்தது. ஆனால், அரசு, யுவானின் வரைபடத்தை வெளியிட அனுமதிக்க விரும்பவில்லை' என்கின்றார்.

யுவான் தனது பெற்றோரை அவரது பத்து வயதுக்குள் இழந்துவிடுகின்றார். தந்தை 1920களில் நடந்த மெக்ஸிக்கன் உள்ளூர் யுத்தத்தில்




இறந்திருக்கின்றார். இதன் பின்னர் யுவான் அவரின் தாத்தாபாட்டிகளோடு வளந்தவர். அத்தோடு பதின்மத்தில் அவர் ஒரு பாடசாலைக்கு, ஹொஸ்டலில் தங்கிப் படிக்க அனுப்பப்படுகின்றார். அது கிட்டத்தட்ட ஒரு ஜெயில் அனுபவம் போன்றதென யுவான் ஒரு நேர்காணலில் கூறுகின்றார்.

யுவான் பின்னர் ஒரு டயர் நிறுவனத்தில் வேலை செய்கின்றார். அதன் நிமித்தம் மெக்ஸிக்கோவின் பல்வேறு நிலப்பரப்புகளுக்கு பயணித்திருக்கின்றார். இந்த வேலையில் அவருக்காகக் கொடுக்கப்பட்ட காரில் ஒரு ரேடியோ போட்டுத் தரவேண்டும் என்று கேட்டதை நிறுவனம் மறுத்ததால் அந்த வேலையை ராஜினாமாய்ச் செய்தார் என்கின்ற ஒரு சுவையான கதையும் இருக்கின்றது.

யுவானின் எழுத்து உச்சத்தில் இருந்தது அவர் சில வருடங்கள் எழுத்துக்கான நிதியைப் பெற்றிருந்த காலமான 195254களெனச் சொல்லலாம். இந்த இரண்டு ஆண்டுகளில்தான் அவர் தனது இரு நூல்களையும் எழுதி வெளியிட்டார். இவ்விரு நூல்களின் புகழ் யுவானை அவரது வாழ்வின் இறுதிக்காலம் வரை அடுத்த புத்தகங்களை எப்போது எழுதுவார் என எல்லோரையும் தொடர்ந்து கேட்க வைத்திருக்கின்றது. ஒருபொழுது மெக்ஸிக்கன்

ஜனாதிபதியே யுவானிடம் ஒரு விருந்தில் இதை நேரடியாகக் கேட்கின்றார் என்றளவுக்கு இந்தத் தொந்தரவு அவரைத் தொடர்ந்து துரத்தியிருக்கின்றது. இறுதியில் அவரது சக எழுத்தாளர் ஒருவர், 'தயவு செய்து யுவானை அவரின் போக்கில் விட்டுவிடுங்கள், அடுத்து ஒன்றை எழுதுங்கள் எனக்கேட்டு சித்திரவதைப்படுத்தாதீர்கள்' என்ற ஒரு கட்டுரையை பத்திரிகையொன்றில் எழுதுகின்றார். 'யுவான், மெக்ஸிக்கோ இலக்கியத்துக்காய் இரண்டு படைப்புக்களைத் தந்திருக்கின்றார்; அதுவே போதும்' என்று அந்தக் கட்டுரை முடியும்.

யுவான் ஏன் தொடர்ந்து எதையும் பிரசுரிக்கவில்லை என்பதற்கான காரணத்தை, அவர் கொடுத்த சொற்ப நேர்காணல்களில் கூட தெளிவாகச் சொல்லவில்லை. ஆனால், அந்த நேர்காணல்களில் தான் பிரசுரிக்கவில்லையே தவிர, எழுதாமல் இருக்கவில்லை என்று அர்த்தமில்லை என்று கூறுகின்றார். யுவான் பிரசுரித்த இந்த இரண்டு படைப்புக்களுக்கு முன் கூட, மெக்ஸிக்கோவைப் பின்புலமாகக் கொண்ட ஒரு பெரும் நாவலை சில வருடங்களாக எழுதியிருக்கின்றார். ஆனால், அவருக்கு அது திருப்தியைக் கொடுக்காததால் முற்றாக அழித்திருக்கின்றார். இதைப் பற்றி ஒரு நேர்காணலில் கேட்கும்போது, 'அது குறித்து கவலை ஏதுமில்லை, அவ்வளவு மோசமான நாவல்' என்று அந்தப் பதிலை எளிதில் முடித்துவிடுகின்றார்.

இந்த ஆவணப்படத்தில் பெரும்பகுதி அவர் எடுத்த புகைப்படங்களின் நிலப்பரப்பைத் தேடிப் போகின்ற பயணமாக இருக்கின்றது. இதில் யுவானின் மகன்களில் ஒருவரும் இருக்கின்றார். யுவான் மிகக்கடினமான மலையில் ஏறி காட்சிதரும் இடத்தைத் தேடி இந்த ஆவணப்படக்குழு ஏறுகின்றது. இந்தக் காலத்திலேயே அவ்வளவு கடினமாக இருக்கும் மலையில் அன்று யுவான் ஏறியிருக்கின்றார், அதைப் புகைப்படமாக்கியிருக்கின்றார் என்பது வியப்பாக இருக்கின்றது.

யுவான் தொடர்ச்சியாக எழுதவில்லையே தவிர அவர் மெக்ஸிக்கோவின் மிக முக்கியமான இன்னொரு பகுதியை ஆவணமாக்கியிருக்கின்றார். மெக்ஸிக்கோவின் பூர்வீகக்குடிகளின் 200இற்கு மேற்பட்ட நூல்களை எடிட்டராக இருந்து தொகுத்துக் கொடுத்திருக்கின்றார். மானுடவியல் அன்று அவ்வளவு மதிப்பு வாய்ந்த துறையாக இல்லாதபொழுதுகளில் யுவான் செய்த இந்த தொகுப்புக்கள் அவ்வளவு முக்கியம் வாய்ந்தவையாகும்.

யுவான் இப்படி தன் வாழ்நாள் காலத்தை பூர்வீகக்குடிகளோடு இணைத்துக்கொண்டு சென்றதற்கு அவரின் வேலை நிமித்தம் ஒரு ஆற்றைத் தடுத்து அணைக்கட்டு கட்டப்பட்டபோது அந்த ஆற்றோடு வாழ்ந்த பூர்வீகக்குடிகளின் கிராமங்கள் அழித்துச் செல்லப்படுவதைப் பார்த்தது ஒரு முக்கிய காரணம் என்கின்றனர். இவ்வாறு ஓர் அழிவைப் பார்த்துவிட்டு ஒரு படைப்பாளி அந்த மக்களுக்காய் தனது வாழ்வின் பெரும்பகுதியைக் கொடுப்பது என்பது விதந்துரைக்கப்பட வேண்டியதல்லவா?

யுவான் தனது 69 வயதில் 1986இல் காலமாகியவர். அவரின் மரணத்தின் பின் 'The Golden Cockerel' என்றொரு நூல் வெளிவந்திருக்கின்றது. எப்போதும் ஒரு படைப்பாளி இறந்தபின் வெளிவருவது அவர்களின் விருப்பத்துக்குரியவையா என்ற கேள்வி இருக்கின்றது. மார்க்வெஸ் இறந்தபின் அவர் பிரசுரிக்க விரும்பாத 'Until August' அண்மையில் வெளிவந்ததை நாமறிவோம். அவ்வாறே ரொபர்தோ பொலானாவோவின் '2666', 'The Salvage Detectives' போன்றவை வெளிவந்து புகழ்டைந்தபின், அவரின் கணினியில் சேகரமாக இருந்த எல்லா படைப்புக்களும் வெளிவரத் தொடங்கின. எனவே, ஒரு படைப்பாளியின் இறப்பின் பின் வெளிவருவதை அவர்களின் பிற படைப்புக்களோடு வைத்து ஒப்பிடமுடியுமா போன்ற சந்தேகங்களும் இருக்கின்றன.

எனக்கு இன்றுவரை தொடர்ச்சியாக எழுதுவதும் வாசிப்பதும் பிடிக்கும். அதேவேளை சில எழுத்தாளர்கள் ஓரிரு சிறந்த படைப்புக்கள் எழுதிவிட்டு உறங்குநிலைக்குப் போனாலும் அவர்களையும் மிகவும் பிடிக்கும். ஆங்கிலத்தில் ஹார்ப்பர் லீ எழுதிய 'To Kill a Mockingbird', தமிழில் 'புயலிலே ஒரு தோணி' எழுதிய பா.சிங்காரம் என்று எண்ணற்ற உதாரணங்கள் இருக்கின்றன. ஈழச்சூழலிலும் கிட்டத்தட்ட 30 வருடங்களுகளாகியும், எந்தத் தொகுப்பும் வெளியிடாத ரஞ்சகுமாரின் 'மோகவாசல்', அருளரின் 'லங்காராணி', கோவிந்தனின் 'புதியதொரு உலகம்' என்று எண்ணற்ற உதாரணங்கள் இருக்கின்றன.

யுவான் ரூல்ஃபோ இரண்டே இரண்டு நூல்களைத்தான் எழுதினார் என்றாலும், அவை எழுதப்பட்டு 75 ஆண்டுகளாகின்றபோதும் இன்னும் நாம் பேசிக் கொண்டிருக்கின்றோம். மேலும் இந்தப் படைப்புக்கள் தனியே மெக்ஸிக்கோவின் அடையாளமாக இல்லாது, முழு இலத்தீன் அமெரிக்க இலக்கியத்துக்குமான முன்னோடியாகவும் ஆகியிருக்கின்றது. யுவானின் 'பெத்ரோ பராமோ'வின் புனைவு மொழியால் எண்ணற்ற இலத்தீன் அமெரிக்க எழுத்தாளர்கள் மட்டுமில்லை, ஆங்கிலத்திலும் பிறமொழிகளிலும் எழுதும் எழுத்தாளர்கள் பலரும் ஈர்க்கப்பட்டிருக்கின்றார்கள். இதைத் தவிர ஒரு படைப்பாளிக்கு மிகச்சிறந்த அங்கீகாரம் கிடைக்கப்போவதில்லை. அந்தவகையில் மிகச் சொற்பமாக எழுதிய யுவான் ரூல்ஃபோ ஆசிர்வதிக்கப்பட்டவர்.

*mail to:* **elanko@rogers.com**

# முத்துலிங்கம்

எப்படி இந்த மாதிரிப் புதுசு புதுசாக எண்ணங்கள் வருது என்று ஆச்சரியமாக இருந்தது முத்துலிங்கத்துக்கு. எண்பத்து நான்கு வயதில் இப்படியெல்லாம் சிந்திப்பேன் என்று அவர் எண்ணியிருக்கவேயில்லை.

● கருணாகரன்
ஓவியம்: ராஜ்குமார் ஸ்தபதி

அலைபோல எண்ணங்கள் வந்துகொண்டேயிருந்தன. சாப்பிடும்போது, குளிக்கும்போது, மாலை நடையின்போது, தொலைக்காட்சி பார்க்கும்போது, புத்தகம் படிக்கும்போது, படுக்கையில் சரியும்போது, எப்போதாவது தூக்கம் கெட்டு விழிக்கும்போது, ஏன் தூக்கத்தில்கூட இந்த எண்ண அலை வந்துகொண்டேயிருக்கிறது.

அலையா இது. அதற்கும் மேலே...

ஏறக்குறைய இதைப்போல எம்.வி.விக்கும் ஒரு சந்தர்ப்பத்தில் ஏற்பட்டதாக எம்.வி.வியே எழுதியிருக்கிறார். 'காதுகள்' நாவலே அதைப் பற்றிய கதைதான். யாரோ காதுகளில் ஓயாமல் எதையோ சொல்லிக் கொண்டிருப்பதைப் போல, எப்போதும் எதுவோ கேட்டுக் கொண்டிருப்பதைப் போல... ஆனால், எம்.வி.விக்குக் காதுகளில் நல்ல வார்த்தைகள், கெட்ட வார்த்தைகள் எனக் கலப்பான மந்திரங்கள்... முத்துலிங்கத்துக்கோ மனதில் ஏதேதோ எண்ணங்கள்...



சிலவேளை யாருடனாவது பேசிக் கொண்டிருக்கும்போது கூட எண்ணங்கள் வந்து மொய்க்கின்றன. இந்த எண்ணங்களால் பேச்சுத் தடைப்பட்டு, தடுமாறி விட வேண்டியுள்ளது. எண்ணங்களின் வழியில் இவர் யோசித்துக் கொண்டிருப்பதைப் பார்த்துவிட்டுக் கேட்பார்கள்: "என்ன ஏதோ கடுமையா யோசிக்கிறீங்கள் போலிருக்கு!" திடுக்கிட்டு, "அதெல்லாம் ஒண்டுமில்லை..." என்று சமாளித்துக் கொள்கிறார் முத்துலிங்கம்.

ஆனாலும் இப்படியே இருந்தால் மற்றவர்கள் தன்னைப் பற்றி ஏதாவது நினைத்துக்கொள்வார்கள் என்ற அச்சம் அவருக்குள்ளே உள்ளோடிப் பரவியது.

இதை மகளிடம் மறைக்க முடியவில்லை. அவள், அவரோடிப்பவள் அல்லவா. அவருடைய ஒவ்வொரு அசைவையும் போக்கையும் கவனித்துக் கொண்டிருப்பவள். ஒரு நாள் கேட்டேவிட்டாள்: "என்னப்பா, எப்ப பார்த்தாலும் எதையோ யோசிச்சுக் கொண்டிருக்கிறியள்? ஏதாவது வாங்க வேணுமா? அல்லது மாமி வீட்டுக்கோ கோயிலுக்கோ எங்கேயாவது போகோணுமா? சொல்லுங்கோ. அப்பிடியெண்டால், வாற ஞாயிற்றுக்கிழமை போகலாம். அதுக்கு முதல்ல போகவேணுமெண்டால், தம்பியை இல்லாவிட்டால், சுந்தரனைக் கூப்பிட்டுச் சொல்லி விடுறன்."

"சீச்சீ... அதெல்லாம் ஒண்டுமில்ல. எங்கயாவது போக வேணுமெண்டால் சொல்லுவன்" என்று மறுத்துவிட்டார் முத்துலிங்கம்.

"அப்ப, உடம்புக்கு ஏதாவதா... டொக்ரரைப் பார்க்க வேணுமா..?" அவள் விடுவதாயில்லை.

அவள் அப்படிக் கேட்டதும் உள்ளூரச் சற்றுப் பதட்டம் எழுந்தது. 'அதெப்படித் தனக்கு மட்டும் எதுவுமே வித்தியாசமாகத் தெரியவில்லை?' என்று யோசித்தார். வெளியே எதையும் காட்டிக்கொள்ளவில்லை என்றாலும் தன்னில் ஏதோ மாற்றம் உண்டாகியிருப்பதை மற்றவர்கள் உணருகிறார்கள் என்று பட்டது முத்துலிங்கத்துக்கு. 'பிறருக்குத் தெரியும் அளவுக்கு மோசமாக இருக்கிறேனா? எல்லோருக்கும் தான் ஒரு அந்நியன்போல மாறிவிட்டேனா?' என்ற குழப்பம் ஏற்பட்டது. ஆனாலும் அதையெல்லாம் பொருட்டாகக் கொள்ள விரும்பவில்லை அவர். மனம் ஆடிவிட்டால் நிலை தளம்பி விடும் என்று எண்ணினார்.

"எனக்கென்ன பிள்ளை? நான் நல்லாய்த்தானே இருக்கிறன். அப்பிடி ஏதுமெண்டால் கேட்கிறன்" என்று உறுதியாக முடித்துக்கொண்டார்.

அதற்கு மேல் அவள் எதையும் கேட்கவில்லை. எதையும் கேட்கவில்லை என்றாலும் அவளுடைய



மனதில் தன்னைப் பற்றிய சிந்தனையோ கவலையோ இருக்கும் என்று எண்ணினார். அவளுக்கும் அப்பாவைப் பற்றிய கவலை இருந்தது.

முத்துலிங்கத்தை யாராவது பார்த்தால் அவருக்கு எண்பத்தி நான்கு வயது என்று மதிக்கவே மாட்டார்கள். மிஞ்சிப்போனால், எழுபது, எழுபத்தி இரண்டு என்றே சொல்வார்கள். தலைகூட முழுதாக நரைக்கவில்லை. உடலில் தளர்ச்சி கிடையாது. அதிகாலை நான்கரை மணிக்கு எழுந்து காலைக் கடன்களை முடித்துக்கொண்டு ஐந்து மணிக்கு முன், விறாந்தையில் யோகாசனத்தில் இருப்பார். ஏழு மணிக்கு குளிப்பு. எட்டு மணிக்குச் சாப்பாடு. பிறகு தன்னுடைய வழமையான வேலைகள். வெளியே செல்வதாக இருந்தால் சைக்கிளில்தான் போய் வருகிறார். அதில் கிடைக்கிற உற்சாகத்தை அனுபவிப்பதில் அவருக்கொரு தனியான ருசி. சீராக வாரி விடப்படும் தலைமுடி. மாதம் இரு தடவை அளவோடு சீராக்கப்பட்ட தாடி. ஒரு நாள் கூடச் சோர்ந்து படுத்ததில்லை. “இந்தத் துடிப்பின் ரகசியம் என்ன?” என்று கேட்டால், “இரவு ஒன்பதரைக்குப் பிறகு விழித்திருப்பதில்லை. காலையில் நான்கரை மணிக்குப் பிறகு தூங்குவதில்லை. நாளாந்த வேலைகளின் ஒழுங்கைச் சரியாக வைத்துக்கொண்டேன். சாப்பாடும் தூக்கமும் வேலையும் சரியாக இருந்தால் மனிசருக்கு ஒரு தொல்லையுமில்லை...” என்பார்.

எந்தப் பதட்டமும் இல்லாமல் தூங்குகின்ற அந்த ஏழு மணித்தியாலங்கள்தான் தன்னுடைய இளமையைப் புதுப்பித்துக் கொண்டிருக்கின்றன என்பதை அவர் சொல்லாமல் சொல்லிக்கொள்வார். உதட்டிலே விரியும் மெல்லிய சிரிப்பு, மழைக்கால மாலை நேர வெயிலைப் போல மினுங்கும்.

வெற்றிலைக் கொடிகளைச் சீராக்குவது, எலுமிச்சைகளுக்கு நீர் பாய்ச்சுவது, பூஞ்செடிகளைப் பராமரிப்பது, நாய்க்குட்டியோடு விளையாடுவது, பேரப் பிள்ளைகளுடன் நேரத்தைச் செலவிடுவது, மகளுக்கு சிறிய அளவில் உதவுவது என்று தானே உருவாக்கிக் கொண்ட வேலைகளை வைத்திருந்தார். அல்லது அந்த வேலைகளுக்காக அவரா என்ற மாதிரியும் இருக்கும்.

இந்த வேலைகள் இல்லாத நேரத்தில் புத்தகம் படிப்பார். இரவில் தப்பாமல் ரேடியோவில் செய்தியும் பாட்டும் கேட்பார். முன்னிரவில் விவசாயச் செய்திகள். தொலைக்காட்சியில் பெரிய ஆர்வமில்லை. தனக்குப் பிடித்தமான திரைப்படம் என்றால் மாதத்துக்கு ஒன்றோ இரண்டோ பார்ப்பார். பழைய படம் புதிய படம் என்ற பேதமெல்லாம் கிடையாது. பிடித்திருக்க வேணும். அவ்வளவுதான். படத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும்போது இடையில், யாரும் தொந்தரவு கொடுக்கக் கூடாது. அப்படி ஏதாவது நடந்தால், பாதியிலேயே சொல்லாமற் கொள்ளாமல் அமைதியாக எழுந்து போய்விடுவார். கோபமோ எரிச்சலோ ஏமாற்றமோ இயலாமையோ முகத்தில் எந்த மாற்றத்தையும் காண முடியாது. அதனால் அவருடைய நேரத்தில் யாரும் பங்கு வைத்துக்கொள்வதில்லை.

'என்னதான் மறுத்து, தான் நன்றாக இருக்கிறேன் என்று அப்பா சொன்னாலும், அவருக்குள் எதுவோ அவரை அலைக்கழித்துக் கொண்டிருக்கிறது. அதை அவர் சொல்ல விரும்பாமலிருக்கலாம். அல்லது காலம் வரும்போது சொல்லிக் கொள்ளக்கூடும். அம்மா இல்லை என்றதுக்குப் பிறகு ஏற்பட்ட தனிமைதான் அப்பாவை இப்படி ஆக்கியிருக்கலாமோ' என்ற கேள்விகள் அவளுக்குள் எழுந்தன.

'இல்லையென்றால், இதையெல்லாம் குறைத்துக்கொண்டு தனியாக நடந்து செல்வாரா?



வெளியே செல்லாத வேளையில் அறைக்குள்ளே முடங்குவாரா? இதற்கு என்ன செய்யலாம்?' என்று யோசித்தாள்.

'அவருடைய தனிமையைப் போக்குவதே வழி. அதற்காக, ஒரு மாறுதலாக மாமி வீட்டுக்கு அழைத்துப் போய், அங்கே சில நாட்கள் தங்க வைத்துப் பார்க்கலாம். மாமிக்கும் அப்பாவைப் பிடிக்கும்' என்று தோன்றியது. அப்பாவுக்குப் பிடித்த இளைய தங்கையே சின்ன மாமி.

மாமியைத் தொலைபேசியில் அழைத்துப் பேசினாள்.

"எப்பிடியிருக்கிறியள் மாமி? அந்தப் பக்கம் வரவேணும் எண்டு யோசிச்சாலும் வரமுடியாமல் பல சோலிகள். வாற கிழமை அங்கே வரலாம் எண்டு யோசிக்கிறம். அப்பாவுக்கும் உங்களைப் பார்த்தால் சந்தோசமாக இருக்கும். ஏன் மாமி உங்களுக்கும் அப்பாவைக் கண்டால் சந்தோசம்தானே!"

"ஓ... அப்படியா... வாங்கோ வாங்கோ... மெத்தச் சந்தோசம். அண்ணர் எப்பிடியிருக்கிறார்? அவரைப் பார்க்க நானும் வரவேணுமெண்டு யோசிக்கிறதுதான். அதுக்கெங்க நேரம்? என்னைக் கூட்டிக்கொண்டு வாறதுக்கு ஆராவது வேணுமே. ரமணனுக்கும் நேரம் சரிப்பட்டு வராது. சனி, ஞாயிறு விடுமுறை எண்டு பேர்தான். அண்டைக்குச் சாப்பிடக்கூட அவனுக்கு நேரமில்லை. நீங்கள் வாங்கோ பிள்ளை..." என்றா மாமி.

அண்ணனைப் பார்க்கப் போகிறேன் என்ற மகிழ்ச்சி அலையாகப் புரள்வதை மாமியின் உற்சாகம் காட்டியது. இதுவரையிலும் அண்ணனை வந்து பார்க்க முடியாததற்கு மகனுக்கு நேரமில்லாதிருப்பதே என்பதையும் சொல்லிவிட்டா. என்னதான் நெருக்கமான உறவாக இருந்தாலும் தன்னில் எந்தக் குறையும் இல்லாத மாதிரிப் பேசுவது மாமியின் வழக்கம்.

"அதுதான் மாமி யோசிக்கிறன், அப்படியே ஒரு கொஞ்ச நாளைக்கு அப்பா உங்களோட நிண்டால் அவருக்கு இன்னும் சந்தோசமாக இருக்கும். உங்களுக்கும் மகிழ்ச்சியாகப் பொழுது போகும்..."

"ஓம் ஓம்... அது நல்லதுதான். ஆனால், நாங்கள் ரண்டு கிழமைக்கு வீட்ட நிற்கமாட்டம்... ரமணனோட கண்டிக்குப் போறம். அதுதான் யோசிக்கிறன். பயணத்தைப் பற்றிச் சொல்ல வேணும் எண்டிருந்தன். அதுக்கிடையில நீ போன் எடுத்திட்டாய் பிள்ளை. நாங்கள் போறதுக்கு முதல்ல வந்திட்டுப் போங்கோவன்..." என்றா மாமி.

"சரி, பார்ப்பம் மாமி. பிறகு என்ன விவரமெண்டு சொல்றன்" என்று தொடர்பை நிறுத்தினாள்.

நல்லவேளை அப்பாவைப் பற்றி, அவர் எதையோ யோசித்துக் கொண்டிருக்கிற மாதிரி இருப்பதைப் பற்றி, மாமியிடம் சொல்வதைத் தவிர்த்துவிட்டேன். இல்லையென்றால், 'அண்ணனுக்கு என்னவோ ஏதோ' என்று மாமியும் குழம்பி விடக்கூடும். அது அப்படியே ரமணன், மலரினி, மாமா என்று எல்லாருக்கும் பதற்றத்தை உண்டாக்கும் செய்தியாகியிருக்கும்' என்று ஆறுதலடைந்தாள்.

வீட்டில்கூட அப்பாவைப் பற்றிப் பிள்ளைகளுக்கோ கணவனுக்கோ அவள் ஒன்றையும் சொல்லவில்லை. ஏதாவது தெரிந்தால் பிறகு, அவர்கள் கவலைப்படுவார்கள். இல்லாவிட்டால் அப்பாவை ஒரு மாதிரிப் பார்த்தாலும் அது அவருக்குச் சங்கடமாக இருக்கும் என்பதால் அதைத் தவிர்த்திருந்தாள்.

என்றாலும் ஒரு நாள் சேரா கேட்டேவிட்டான்: "அப்பாவுக்கு உடம்புக்கு ஏதுமா? கொஞ்சம் சோர்வாக இருக்கிற மாதிரியிருக்கு? என்னெண்டு ஒருக்கால் கவனிச்சுள் கொள்ளும்...".

அந்தக் கேள்வி அவளுக்கு மேலும் கவலையை அளித்தது.

வெளியே மழை பெய்து கொண்டிருந்தது. எப்போது தொடங்கியது என்று அவள் கவனிக்கவில்லை. அவளுடைய புத்தி முழுவதும் அப்பாவைச் சுற்றியே இருந்தது.

மாமியிடம் சொன்ன மாதிரியே அங்கே போய் வந்துவிடுவோம். அதற்கு மேல் இப்போதைக்கு எதுவும் வேண்டாம். அவர் வீட்டிலேயே இருக்கட்டும். கொஞ்ச நாட்களுக்கு அப்பாவை அப்படியே விட்டுப் பார்க்கலாம். இதற்கு மேல் அவரைத் தொந்தரவு செய்யக்கூடாது என்று எண்ணிக்கொண்டு வழமையைப் போல அவருக்கான அத்தனை வேலைகளையும் செய்து வைத்துவிட்டு வேலைக்குப் போய் வந்து கொண்டிருந்தாள்.

முதுமையென்றால் புரிந்துகொள்ளவே முடியாத ஒரு மாயப் பரப்பு விரிந்து கொள்கிறது. எவ்வளவுதான் அப்பா மகள் என்ற உறவும் எத்தனையோ ஆண்டுகள் நெருக்கமும் இருந்தாலும் அதையெல்லாம் ஓரமாகத் தள்ளிக்கொண்டு மாயக் கதவுகள் முளைத்து மூடுகின்றன. புரிந்துகொள்ள முடியாத ஒரு பிரதேசம் உருவாகி விடுகிறது என்ற எண்ணம் அவளுக்குள் வலுத்தது.

முத்துலிங்கத்துக்கும் அப்படி எதுவோ தோன்றியிருக்க வேணும்.

**ம**கள் கேட்டதைப்போல, அவருடைய உடம்புக்கு எந்தப் பிரச்சினையுமில்லை. தினமும் காலை ஐந்து மணிக்கு முன்பாகவே எழுந்து விடுகிறார். மழைக்காலங்களில் மட்டும் ஒரு அரை மணியோ ஒரு மணியோ பிந்தும். ஆறு மாதங்களுக்கு முன், டெங்குக் காய்ச்சல் வந்தபோது கூட பிந்தி விழித்ததில்லை. உடலில் மட்டுமல்ல மனதிலும் எந்தத் தளர்வும் அவரை நெருங்கியதில்லை. அதற்கு அவரும் அனுமதித்ததில்லை.

ஆகவே, மருத்துவம் பார்ப்பதாக இருந்தால் அது உடலுக்கல்ல. மனசுக்குத்தான். ஆனால், அது கூடத் தேவையில்லை என்றே பட்டது. மருத்துவரிடம் காட்டி ஆலோசனை பெற வேண்டிய அளவுக்குத் தன்னுடைய மனதில் எந்தக் கோளாறும் இருப்பதாகப் படவில்லை முத்துலிங்கத்துக்கு. தனக்கு அப்படித் தோன்றாவிட்டாலும் மற்றவர்களுக்கு அப்படித் தோன்றுகிறதா? என்ற கேள்விதான் திரும்பத் திரும்ப எழுந்தது. அப்படித் தோன்றியபடியாற்தானே இப்படியெல்லாம் கேட்கிறார்கள்....

சரி, மகளுடைய விருப்பத்துக்காக அவளுடைய திருப்திக்காக மருத்துவரைப் பார்க்கலாமா என்று கூட ஒரு கணம் சிந்தித்தார்.

அவளுக்காக என்றால், எப்படி மருத்துவருக்குத் தன்னுடைய நிலைமையைச் சொல்வது? தன்னை விட மகளுக்குத்தான் ஏதோ பிரச்சினை என்றல்லவா மருத்துவர் யோசிப்பார். அது சரியாக இருக்காதே! உண்மையில் நோயில்லாமல் மருத்துவரைப் பார்க்க முடியுமா? எதைத்தான் அவருக்குச் சொல்வது?

குழப்பமாக இருந்தது முத்துலிங்கத்துக்கு.

உளநிலை பாதிக்கப்பட்டவர்கள் தங்களுக்கு அப்படியான பாதிப்பு இல்லை என்றே சொல்வார்களாம். ஏறக்குறைய அதுதான் இப்போது தன்னுடைய நிலையோ என்றொரு சந்தேகம் ஒரு கணம் வந்தது. இந்த எண்ணம் வந்தபோது உடலே சட்டெனக் குளிர்ந்தது. அடிவயிறு கலங்கித் தலை சுற்றுவது போலிருந்தது. அப்படியே பக்கத்தில் நின்ற மரத்தில் கையூன்றி, உடலைச் சாய்த்து ஆறுதற்படுத்தி நின்றார்.

சற்று நேரத்தில், யாரும் எண்ணுவதைப்போல தனக்கு உடலிலோ மனசிலோ எந்தப் பிரச்சினையுமில்லை என்ற நம்பிக்கை உறுதியானது. அது தெம்பை அளித்தது. ஆனால், இதை எப்படி மற்றவர்களுக்கு விளக்குவது என்றுதான் புரியவில்லை அவருக்கு. சரி, கொஞ்ச நாட்களுக்கு விட்டுப் பார்க்கலாம் என்று இருந்துவிட்டார்.

**எ**ப்போது இந்த விளையாட்டுத் தொடங்கியது என்று சரியாக நினைவில்லை முத்துலிங்கத்துக்கு. அவருடைய மனைவி இறந்து மூன்றாவதோ நான்காவதோ வாரம் என்று நினைவு. மனைவி இறந்த பிறகு, அவள் இல்லாத வெறுமையில் அந்த நாட்கள் உலர்ந்து போயிருந்தன. தூக்கத்தை யாரோ பறித்து ஒளித்து வைத்ததைப்போலிருந்தது. பகலில் கூட பொழுதைத் தள்ளுவது பெரும்பாடாக இருந்தது. என்ன செய்தாலும் அதையெல்லாம் மிதித்துக்கொண்டு மனைவியின் நினைவுகள் வந்து முட்டிக்கொண்டு நின்றன. மனசு குழம்பிக் கண்கள் நிரம்பின. சரியாகச் சாப்பிடவோ தூங்கவோ முடியவில்லை.

மனைவிக்கும் அவருக்குமான உறவு பலவிதமான ருசி கொண்ட பின்னல்களை உடையது. உயிரோடிருந்தால் மட்டும்தான் அன்பும் பிணைப்பும் இருக்குமா? இல்லாவிட்டாலும் அது நீடிக்கும்தானே! மனைவி இல்லாமற் போன பிறகு மேலும் மேலும் அன்பும் உறவும் பெருகுவதாகப் பட்டது அவருக்கு.

அதிலிருந்து விடுபட வேணுமா? இல்லையா? என்று ஒரு நாள் கேள்வி எழுந்தது. இதென்ன பைத்தியக்காரத்தனம்? என்று அதே கணம் வெட்கம் வந்தது. அவளுடைய நினைவுகளோடிருப்பது மகிழ்ச்சியாகவும் நிறைவாகவும் இருந்தது ஒருபோது.

அதில் அவளோடு கூட இருப்பது போலொரு நிறைவு. இனிமை. இன்னொருபோது அது அவரைத் தொடர்ந்து கொண்டிருந்ததால் எதையுமே செய்ய விடவில்லை எனப் பட்டது. இரண்டுக்குமிடையில் எதைத் தேர்வது என்று தீர்மானிக்க முடியாமல் தவித்தார்.

அது கோடை காலம். வெயில் அனலாகத் தீய்த்துக் கொண்டிருந்த நாட்கள். வீதியோரத்தில் முளைத்திருந்த செடி, கொடிகள், புற்கள் எல்லாமே பட்டழிந்து கொண்டிருந்தன. வேலியில் நின்ற பூவரசுகள் கூட வாடத் தொடங்கிவிட்டன.

அப்போதுதான் சற்று மாறுதலாக எதையாவது செய்து பார்க்கலாமா என்று யோசித்தார் முத்துலிங்கம். அப்படித்தான் இந்த எண்ணங்கள் உதயமாகின. அதையெல்லாம் எழுதிப் பார்க்கலாம் என்று தோன்ற ஒரு நோட்டுப் புத்தகத்தில் எழுதத் தொடங்கினார். மனதில் தோன்றுவதையெல்லாம் ஒன்றாக எழுத முடியாதல்லவா! ஆகவே ஒவ்வொன்றாக எழுதலாம் என்று தீர்மானித்தார். அப்போதும் குழப்பம் ஏற்பட்டது. எதை முதலில் எழுதுவது என்று. எது முதலில் எது பிறகு என்பதை விட, அவ்வப்போது என்ன தோன்றுகிறதோ அதை எழுதிக் கொள்ளலாம் என்று தொடங்கினார்.

முதலில் தனக்குப் பிடித்த மனிதர்களை எழுதினார். நண்பர்கள், உறவினர்கள், கூடப் படித்தவர்கள், ஆசிரியர்கள் என்றொரு பட்டியல் உடனேயே தயாராகியது. அவரே வியக்கும்படியாக ஏராளம்பேர் அதிலே இருந்தனர். எழுத எழுத விரிந்து கொண்டேயிருந்தன பெயர்கள். அட இவ்வளவு பேரோடு எனக்கு உறவிருந்ததா? உற்சாகம் பொங்கியெழுந்தது.

தொடர்ந்து வந்துகொண்டேயிருந்தன ஏராளம் முகங்கள்.

தெரிந்தவர்கள், ஒன்றாகப் படித்தவர்கள், கூட வேலைசெய்தவர்கள், ஊரில் இருந்தவர்கள், பணியிடத்தில் அறிமுகமானவர்கள், வெளியூரில் உறவினர் வீட்டுக்குப் போன இடத்தில் சந்தித்தவர்கள்... என ஆயிரமாயிரம் முகங்கள், பெயர்கள்.

மருத்துவமனையில், பயணத்தில் அறிமுகமாகியவர்களின் பெயர்கூட நினைவுக்கு வந்தது. சிலருடைய முகங்கள் நினைவுக்கு வந்தன, பெயர் மறந்துவிட்டது. சிலருடைய பெயர்கள் நினைவிலிருந்தன, முகங்கள் மங்கிவிட்டது. ஒவ்வொருவருக்கும் பல கதைகள், பல நினைவுகள். அத்தனை பேரும் நல்லவர்கள். நல்லவர்கள் என்றால், ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்தில் நல்லவர்கள். சிலர் பல விதத்தில். ஆழமாக ஒரு கணம் யோசித்தார். வாழ்க்கையில் தான் மிகவும் கோபடைந்த, வெறுத்தவர்கள் யாராவது இருக்கிறார்களா? என்று. இரண்டு பேர் மட்டும் தன்னைக் கோபமடைய வைத்திருக்கிறார்கள். படிக்கிற காலத்தில் ஆசிரியராக இருந்தவர் ஒருவர். மற்றவர் பணியிடத்தில். ஆனால், இருவரின் மீதுமிருந்த அந்தக் கோபம் எப்போதோ மறைந்துவிட்டது. வெறுப்பையூட்டியவர்கள் என்று யாருமேயில்லை. இது அவருக்கே ஆச்சரியமாக இருந்தது.

இத்தனை நல்லவர்களோடு வாழ்ந்திருக்கிறோமா என்று ஆச்சரியப்பட்டார். இப்படி நல்லதொரு உறவுச் சூழல் நமக்கு வாய்த்திருக்கிறதே என்று வியப்பாக இருந்தது. நெஞ்சு ஒரு கணம் பெருமிதத்தில் விம்மியது. பேனாவை அப்படியே வைத்துவிட்டு எழுந்து சென்று தண்ணீரைக் குடித்தார். வெளியே வந்து விறாந்தையில் இருந்து வெளியைப் பார்த்தார். செடிகள் காற்றில் ஆடி அசைந்தன. அவருக்கு நெருக்கமான, எப்போதும் வீட்டுக்கு வரும் இரண்டு மைனாக்களும் முற்றத்திலிருந்து விர்ரெனப் பறந்து மரத்தில் அமர்ந்தன. சட்டென மனைவியின் நினைவெழுந்தது. மைனாக்களை ஊன்றிக் கவனித்தார். இதில் ஒன்று இல்லாமற்போனால் மற்றது என்ன செய்யும்? தனியாக ஒரு மைனாவை அவர் கண்டதேயில்லை. உதட்டைக் கடித்துக் கொண்டு, திரும்ப வந்து உள்ளே படுத்தார். நினைவுகள் பெருகின. எழுந்து எழுதத் தொடங்கினார்.

ஒரு தடவை பேருந்தில் பயணித்தபோது அவரொத்த வயதுடைய ஒருவர் முத்துலிங்கத்துக்கு அருகிலே இருந்து பயணித்தார். அந்தப் பயணத்தில் எப்படியோ இருவருக்கும் அறிமுகம் ஏற்பட்டு, உறவாக வளர்ந்தது. அந்த முன்னறிமுகமில்லாத மனிதர் எவ்வளவு நல்லவர் என்று அன்றே எண்ணினார். இப்போது அவரையும் தன்னுடைய பதிவேட்டில் எழுதிக் கொண்டார்.

ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் எத்தனையோ ஆட்களை சந்திக்கிறார்கள்! அவ்வளவு பேரையும் யாராவது எழுதி வைத்திருக்கிறார்களா? குறைந்த பட்சம் நினைவிலாவது வைத்திருக்கிறார்களா? அல்லது தன்னைப்போல அவர்களை நினைவு வைத்து இப்படி எழுதிக் கொண்டிருக்கிறார்களா? அந்தக் கணத்தில் தன்னை அறியாமலே சிரிப்பு வந்தது முத்துலிங்கத்துக்கு.

இன்னொரு நோட்டில், தான் பார்த்த திரைப்படங்களைப் பற்றி எழுதினார். படங்களின் பெயர்ப்பட்டியலோடு, அந்தப் படங்கள் பிடித்ததா? இல்லையா? ஏன் பிடித்தன? ஏன் பிடிக்கவில்லை? எப்போது, எந்தச் சூழலில், யாரோடு அல்லது யாருமின்றித் தனியாகப் பார்த்தது என்ற சுருக்கக் குறிப்புகளும் அவற்றோடு சேர்க்கப்பட்டன. முதலாவதாகப் பார்த்த படம் 'அனார்க்கலி'. அஞ்சலி தேவியும் அனார்க்கலியும் நடித்திருந்தார்கள். முத்துலிங்கத்தின் அம்மாவின் தம்பி, ஐயாத்துரை மாமாதான் அழைத்துப் போயிருந்தார். அது ஒரு மழைநாள். சைக்கிளில் சென்றே பார்த்தார்கள். போகும்போது மழையில்லை. படம் முடிந்து வெளியேறும்போது மழை அடித்தது. மழையில் நனைந்து கொண்டு வீட்டுக்கு வந்தது, வரும் வழியில் வெள்ளத்தில் சூழ் பிடித்து மீன் அடித்தவர்களைக்

கண்டது. அவர்களிடம் மீன் வாங்கி வந்து நள்ளிரவில் கறியாக்கிச் சாப்பிட்டதெல்லாம் இன்னும் அப்படியே மனதில் நின்றது. சில நினைவுகளுக்கு வயதாவதில்லை. அதற்குப் பிறகொரு தடவை அனார்க்கலியை நண்பர்களோடு சேர்ந்து பார்த்திருக்கிறார் முத்துலிங்கம். ஆனாலும் முதலில் பார்த்த ருசி பிறகு கிடைக்கவில்லை.

இப்படி எழுதும்போது அவருக்கே வியப்பாகவும் சுவாரசியமாகவும் இருந்தது. காலம்தான் எவ்வளவு விசித்திரமானது? நம்முடைய நினைவுகளில் எவ்வளவைச் சேகரமாக்கி வைத்திருக்கிறது!



வேறொரு நோட்டில், வீரை, பாலை, பயறி, கருங்காலி, விண்ணாங்கு, பிடான், காயா, கொக்கட்டி, நாவல், சுரவுன்னை, துவரை, பனிக்கை, சடவக்கு, வெள்ளுருவை, ஒதி, ஆல், ஆத்தி, இத்தி, குமிழ், நறுவிலி, முதிரை, உலுவிந்தை, காட்டுமா, கொண்டல், வாகை, புன்னை, புங்கை, கூழா, கூமா, கருவேல், காட்டுத்தோடை, தில்லை, இலகு, மஞ்சணத்தி, சிற்றிலைப்பயறி, செம்மணத்தி, பங்கிராய், மோதிரக்கண்ணி எனக் காட்டு மரங்களைப் பற்றி எழுதினார். ஒவ்வொரு மரத்தோடும் அவருக்கு ஏராளம் நினைவுகளுண்டு. பழங்களாக, தடியாக, பூக்களாக, காய்களாக விரிந்து கொண்டேயிருந்தன அவையெல்லாம். எல்லாவற்றையும் எழுதினார்.

மரங்களைப் பற்றி எழுதும்போது அவருடைய வயதே குறைந்து செல்வதைப் போலிருந்தது. நண்பர்களோடும் வேலுக்குஞ்சியோடும் வேட்டைக்குக்குப் போனது, வீட்டுக்குப் பக்கத்தில் உள்ள காட்டில் தங்கைமாரோடு பழங்கள் பறித்ததுண்டது எல்லாம் நினைவில் எழுந்தன. கோடு போட்டு, துணைக்குறிப்பாக அதையும் பதிந்து கொண்டார்.

அவர் பிறந்த கிராமத்தில் வீட்டோடு நெருங்கியதாக காடிருந்தது. சரியாகச் சொன்னால், காட்டின் ஓரமாகவே வீட்டை அமைத்திருந்தார் ஐயா. அதனால் சிறுவயதிலேயே காடு அவருக்கு நல்ல பரிச்சயம். மான், முயல், பன்றி, மயில்களையெல்லாம் வீட்டிலிருந்தே பார்த்திருக்கிறார். மூன்று தடவை வெங்கிணாந்திப் பாம்பே அவர்களுடைய வீட்டுக்கு அருகில் வந்திருக்கிறது. அதை அடிப்பதா விரட்டி விடுவதா என்றொரு விவாதமே நடந்தது. இது நடந்தது மூன்றாவது பாம்பு வந்தபோது. அப்பொழுது உயிரினப் பல்வகைமை (*Biodiversity*) பற்றி மருமகள் படித்திருந்தாள். அதனால் பாம்பை அடித்துக் கொல்வதற்கு அவள் சம்மதிக்கவில்லை. அவளுக்கு ஆதரவாக அம்மாவும் பாட்டியும் நின்றார்கள். அந்தப் படிப்புத்தான் பாம்பைத் தப்ப வைத்தது என்று அப்போதே முத்துலிங்கத்துக்குப் புரிந்தது. ஆனால், அயலில் உள்ளவர்களெல்லாம் பாம்பை உயிரோடு தப்ப வைப்பதற்கு விரும்பவில்லை. தப்பிச் சென்றால், அது ஆட்டையோ மாட்டையோ பிடித்து விழுங்கிவிடும் என்று சொல்லிக் கொண்டேயிருந்தார்கள்.

அதற்கு முன்பு ஒரு பாம்பை முத்துலிங்கத்தின் கண் முன்னால் வெட்டிக் கொன்றார் இரத்தினசிங்கம். கழுத்தில் ஒரே வெட்டு. முத்துலிங்கத்தின் கண்ணுக்கு முன்னால் மட்டுமல்ல ஊரின் கண்ணுக்கு முன்பாகவே அந்தச் சாகஸம் நடந்தது. அதைப் பார்த்த திகைப்பில் திறந்த வாயை மூடுவதற்கு ஊருக்கு ஒரு மாதத்துக்கு மேலாகியது. அதற்குப் பிறகு இரத்தினசிங்கம் புகழால் ஒரு அடி உயர்ந்துவிட்டார். முத்துலிங்கத்துக்கோ வெட்டும்போது வேதனையில் மெல்ல அசைந்து துடித்த பாம்புதான் கண்ணுக்குள் நின்றது. அழிய மறுக்கும் துயரம் அது.

“வெங்கிணாந்திப் பாம்பை லேசில அடிச்சுக் கொல்ல முடியாது. தடியால் அடித்தால், அது ரப்பரில அடிப்பதைப் போலவே ஜம்பண்ணிக் கொண்டிருக்கும். அதாலதான் ரத்தினசிங்கம் வெட்டிக் கொன்றான்” என்று சொன்னார் ராசப்பா. ஒரு பாம்பைக் கொல்வதற்குக் கூட இப்படியெல்லாம் நுட்பமிருக்கிறதா என்று ஆச்சரியமாக இருந்தது முத்துலிங்கத்துக்கு.

இந்த நினைவுகள் வந்தபோது ஒரு தடவை காட்டுக்குப் போய் வந்தாலென்ன என்ற கேள்வி எழுந்தது முத்துலிங்கத்துக்கு. “ஊருக்கு ஒருக்கால் போட்டு வரப்போறன்“ என்று மகளுக்குச் சொல்லிவிட்டு,

ஊருக்குச் சென்று ஒரு வாரம் இருந்து திரும்பினார். திரும்பி வரும்போது பை நிறையக் காட்டுக் கிழங்குகளையும் கொடி வேர்களையும் கொண்டு வந்தார். வீடே வாசம் கமழ்ந்தது.

அதற்குப் பிறகு சில நாட்களாக அவர் கொஞ்சம் உற்சாகமாகவே இருந்ததை மகள் கவனித்தாள். அவளுக்கும் மகிழ்ச்சியாக இருந்தது.

வீட்டுக்கு வந்த பிறகு இரண்டு நோட்டுகளில் அழிந்து போன காட்டைப் பற்றி எழுதினார். பல மரங்கள் காணாமலே போய்விட்டிருந்தன. ஆனால், ஊரில் அதைப் பற்றி யாரும் கவலைப்படுவதாகத் தெரியவில்லை. காட்டை அழித்தால்தான் தங்களால் வாழ முடியும் என்ற மாதிரி ஒரு தலைமுறை வளர்ந்துவிட்டிருந்தது. முன்பு காட்டைப் பராமரித்து, அதனோடு இணைந்து, அதில் பயனைப் பெற்று வாழ்ந்தவர்களிடம் கூட எந்தக் கவலையும் இருப்பதாகத் தெரியவில்லை. தன்னுடைய தலைமுறைக்குள் பல மரங்கள் அழிந்து, அடையாளமற்றுப் போய்விடும் என்று எழுதும்போது தொண்டை அடைத்தது. அழுகை வருமாப்போலிருந்தது.

இன்னொரு நாள் செடிகொடிகளைப் பற்றித் தனியாக எழுதினார். செடிகொடிகளைப் பற்றி எழுதும்போது பாதிக்குமேல் அவற்றின் பயன்பாடுகளைப் பற்றியும், அதனோடு எழுகின்ற நினைவுகளையும் எழுத வேணும் என்று தோன்றியது.

ஊரில் இருந்த காலத்தில் செடி கொடிகளுக்காக வெளியூரிலிருந்து பரியாரிமார் வந்து கிழமைக்கணக்காக வீட்டில் இருந்த நாட்கள் நினைவுக்கு வந்தன. எல்லோரையும் விட ராமசாமிப் பரியாரியாரைத்தான் முத்துலிங்கத்துக்கு அந்த வயதிலேயே பிடித்தது. ராமசாமிப் பரியாரியார்தான் மற்றவர்களை விடக் கெட்டிக்காரர் போலிருந்தார். அய்யாவுக்கும் ராமசாமிப் பரியாரியாருக்கும் கூட நன்றாக வழிபோகும். செடிகளைப் பற்றி, அவற்றின் குணங்களைப் பற்றி, தங்களுடைய குடும்பச் சமாச்சாரங்களைப் பற்றியெல்லாம் இருவரும் இரவு நீண்ட நேரமாகப் பேசிக்கொள்வார்கள். ராமசாமிப் பரியாரியாரைப் பிடிப்பதற்கு அய்யாவுடனிருந்த நெருக்கம் ஒரு காரணமாக இருக்கலாம்.

செடி கொடிகளைப் பற்றி முழுதாக எழுத வேணும் என்றால் இன்னும் இரண்டு மூன்று நோட்டுப் புத்தகங்கள் நிறையும் போலிருந்தது. இருந்தாலும் அதையெல்லாம் எப்படியும் எழுதி முடித்து விட வேணும் என்று தீர்மானித்தார். சில செடிகளின் பெயர் மறந்துவிட்டது. அது அவரைத் துக்கப்படுத்தியது. சிலவற்றைப் பார்த்ததும் நினைவுக்கு வருகிறது.

மேலும் தெரிந்த விலங்குகள், பறவைகள், பிடித்த நடிகர், நடிகைகள், பாடகர்கள், தான் போக விரும்பிய நாடுகள், பார்க்க விரும்பிய இடங்கள்... பிடித்த புத்தகங்கள், பிடித்த பாடல்கள், அவை பிடித்ததற்கான காரணங்கள், பிடிக்காத புத்தகங்கள், படிக்க விரும்பிய நூல்கள், விருப்பமான எழுத்தாளர்கள், பூக்கள், அரசியற் தலைவர்கள், தனக்குத் தெரிய இறந்த ஆட்கள் என எழுதிக் கொண்டிருந்தவருக்குத் திடீரெனத் தன்னுடைய பெயரில் உள்ளவர்களைப் பற்றி எழுதினால் என்ன என்று தோன்றியது.

ஊரில் தன்னை விட இன்னும் மூன்று முத்துலிங்கங்கள் இருந்தார்கள். அதில் தன்னை விட வயதில் மூத்த இரண்டு பேர் இருந்தனர். தன்னுடைய வயதில் ஒருத்தன் மட்டுமே இருந்தான். படு குழப்படிகாரன். பதினேழு பதினெட்டு வயதில் வீட்டில் சண்டை போட்டுக் கொண்டு போய் பதினைந்து வருசத்துக்குப் பிறகு ஊருக்கு வந்து திருமணமாகி மதிப்போடு வாழ்ந்தவன், ஒரு நாள் பாம்பு தீண்ட இறந்தான். ஒருவர் திருமண வழியாக ஊருக்கு வந்தவர். இன்னொரு முத்துலிங்கம் பெருங்குடிகாரர். எப்போதும் நிறைவெறியில் வீதியையே கோணலாக்கியபடி நடந்து செல்வார். தெரு நாய்களைக் கூடக் கலகலப்பாக்கும் மனிதர். வரலாற்றில் எல்லோருக்கும் ஏதோ ஒரு இடமுண்டு. அந்தளவுக்கு அதனுடைய மனம் மிக விசாலமானது...

இதை விட எழுத்தாளர் அ. முத்துலிங்கம், பாடலாசிரியர் முத்துலிங்கம், அரசியல் செயற்பாட்டாளர் பெ. முத்துலிங்கம், நீர்கொழும்பு முத்துலிங்கம்... இப்படியே ஒரு நெடும் பட்டியல் வந்தது. அவரோடு வேலை செய்த இன்னொரு முத்துலிங்கமும் இருந்தார். மிகச் சாதுவானவர். அமைதிதான் அவருடைய அடையாளம். நல்ல மனிதர். திருமணமே முடித்துக் கொள்ளவில்லை. திறக்கப்படாத புத்தமொன்றைப்போலவே வாழ்ந்து மடிந்த முத்துலிங்கம் அவர்.

விரும்பிய இடங்களுக்கோ நாடுகளுக்கோ தன்னால் போகமுடியவில்லை என்றாலும் பாதி நாடுகளுக்காவது தன்னுடைய பேர் வழியில் ஒருத்தரான அ.முத்துலிங்கம் போயிருக்கிறார். அங்கெல்லாம், போனேன், பார்த்தேன், வாழ்ந்தேன் என்றில்லாமல், அதைப் பற்றியெல்லாம் எழுதியிருக்கிறார் மனுசன். அதுவே தான் போய் வந்ததைப்போல ஒரு நிறைவைக் கொடுத்தது அவருக்கு.

வாழ்க்கையில் எத்தனை முத்துலிங்கத்தைச் சந்தித்திருக்கிறேன்? எத்தனை முத்துலிங்கத்தை அறிந்திருக்கிறேன்? எத்தனை முத்துலிங்கங்கள் வாழ்ந்திருக்கிறார்கள்? இப்பொழுது எத்தனை முத்துக்கள் வாழ்ந்து கொண்டிருக்கின்றன?

இப்படி எண்ணிக் கொண்டிருந்தவருக்கு இன்னொரு எண்ணம் வந்தது. தான் விரும்பிய பெண்களைப் பற்றி எழுத வேணும் என.

இரண்டு நாட்களாக அதைப் பற்றியே யோசித்தார். மகிழ்ச்சியும் துக்கமும் கலந்து கலந்து மனது

அலைமோதியது. யாரையெல்லாம் பிடிக்கும்? அம்மா, அக்கா, தங்கைமார், மாமி, பெரிய மாமி, பெரியம்மா, ஆசையம்மா, ஆச்சி, பக்கத்து வீட்டிலிருந்த ராசம்மா அக்கா, மணி அக்கா, கூடப்படித்த பெண்கள், படிப்பித்த ஆசிரியைகள் எல்லோரையும் எழுதியாயிற்று.

அதற்கு அப்பால் பிடித்த பெண்கள்? அப்பால் பிடித்த பெண்கள் என்றால்...! அது யார்? யாரெல்லாம்? பதினைந்து வயதிலே முத்துலிங்கத்துக்கு ஒரு பெண்ணைப் பிடித்தது. அது என்ன மாதிரியான விருப்பம் என்று தெரியாது. ஆனால், அந்தப் பெண்ணை அவருக்குப் பிடித்திருந்தது. அவளுக்கு அவரை விட இரண்டு மூன்று வயது குறைவாக இருக்கலாம். பக்கத்துத் தெருவில் இருந்தாள். இரண்டு வகுப்புக் குறைவாகப் படித்தாள். பொதுநிறம். கவரும் கண்கள். துருதுருப்பான நடை. வாளிப்பான தோற்றம். அவளின் மீது உண்டானது அன்பா, காதலா, அதையெல்லாம் விட வேறு ஏதாவதா? என்று அவருக்கு இன்னும் விளங்கவே இல்லை. ஆனாலும் அவளுடைய நினைவுகள் நெடுங்காலமாக வந்து வந்துகொண்டேயிருந்தன. அவளிடம் அதை அவர் ஒருபோதுமே சொன்னதோ வெளிப்படுத்தியதோ இல்லை. அவள் கூட அவரிடம் எந்தச் சமிக்ஞையையும் காட்டியதில்லை. என்றாலும் இப்போதும் அவள் மீதான அன்பு அப்படியே ஒளித்துண்டொன்றைப் போல தன்னுடைய மனதின் ஆழத்தில் கரைந்து விடாமல் இருக்கிறது என்று தோன்றியது. அவள் இப்பொழுது எங்கே இருக்கிறாள்? என்ன ஆனாள்? என்றே அவருக்குத் தெரியாது. ஆனாலும் அவளை இழந்த ஒருணர்வு உள்ளே உண்டு. ஏனோ தெரியாது, அவரை அறியாமலே அவளுடைய பெயரை இதற்கு முன்னரும் பல தடவை சுவரில், மரங்களில், காகிதத்தில் எல்லாம் எழுதிப் பார்த்திருக்கிறார். அந்தப் பெயரை நினைப்பதே அதன் மீது தோகையால் வருடுவதைப்போல ஒரு இதம். ஒரு தடவை அவளுடைய பெயரின் மேல் முத்தம் கூட இட்டிருக்கிறார். இப்போதும் பெருமூச்சொன்று வந்தது. அதையிட்டுச் சிரித்தார்.

அதை விட்டுப் பார்த்தால், இன்னொருத்தி அவருடைய பத்தொன்பதாவது வயதில் அறிமுகமானாள். தூரத்து உறவு. உண்மையில் அப்போது அவளைத்தான் அவர் முழுதாக விரும்பினார். இருந்தாலும் அதையும் அவர் வெளிக்காட்டிக் கொண்டதில்லை. அதற்கான சூழலும் அவருக்கிருக்கவில்லை. மூன்று சகோரிகளோடு, கிராமத்தில் உள்ள விவசாயக் குடும்பத்தில் பிறந்த ஒரு தமிழன் எப்படிப் பத்தொன்பது வயதில் தன்னுடைய விருப்பத்தை ஒரு பெண்ணிடம் சொல்ல முடியும்? அது தற்கொலைக்கு ஒப்பானது. அறிந்தால் வீடே ரணகளமாகி விடும். அதை மிஞ்சி அந்தப் பெண்ணை, அந்தச் சூழலில் கை பிடித்தால், வாழ்க்கையே தொலைந்துபோகும் என்று அஞ்சி அந்த எண்ணத்தை விருப்பத்தை தன்னுடைய மனதின் ஆழத்திலேயே புதைத்துவிட்டார்.

அவளைப் பற்றி எப்போதாவது நினைவு வந்தால்... துக்கம் அடைக்க ஏதோ ஒரு வெறுப்பில் அந்த எண்ணமே வரக் கூடாது என்று பதற்றத்தோடு பிரார்த்திப்பார். பலவந்தமாக அவளை மறக்க முயற்சித்தார். தன்னுடைய இயலாமையின் மேல் அவருக்கே வெறுப்பு வந்தது.

இப்பொழுது முன்னே வந்து சிரித்துக் கொண்ட நிற்கிறாள் அந்த நினைவுத் தேவதை. அவளைப் பற்றிய நினைவுகளை மனதில் கொண்டு வருவதற்கு முயன்றார். முடியவேயில்லை. மங்கலாகச் சில நினைவுகள். அவளின் பெயரை நெடுங்காலத்துக்குப் பிறகு மனதுக்குள் சொல்லிப் பார்த்தார். பிறகு மெல்லச் சத்தமாகச் சொன்னார். இன்னும் கொஞ்சம் சத்தமாகச் சொல்லி அழைத்தார். ஒரு போதுமில்லாதவாறு அவருடைய கண்களிலிருந்து கண்ணீர் பொலபொலவென உதிர்ந்தது. இந்தக் கண்ணீர்தான் அவளுக்கான அன்பா? அவளுக்கான காணிக்கையா?



அப்படியே படுக்கையில் சரிந்தார். நீண்ட நேரமாக விழித்திருந்தவர் எப்போது தூங்கினார் என்று தெரியவில்லை. ஆழ்ந்த உறக்கத்திற்குப் பிறகு விழித்தவர், வெளியே வந்து முற்றத்தில் நின்று, நிமிர்ந்து வானத்தைப் பார்த்தார். மனதிலே ஏதாவது அழுத்தமோ பாரமோ மகிழ்ச்சியோ வந்தால், வெளியே வானத்தைப் பார்க்கும் பழக்கம் அவருக்குண்டு.

வானத்தைப் பார்த்தவருடைய கண்களில் தெரிந்தன கொத்து மேகங்கள். விதவிதமான உருவங்களில். அந்த உருவங்கள் எப்படியிருக்கின்றன என்று வேடிக்கை பார்த்தார். கண்கள் அறியாமலே அவை உருமாறிக் கொண்டிருந்தன. இந்த மேகங்களை மனைவிக்கு நன்றாகப் பிடிக்கும். ஓய்வு கிடைக்கும்போதெல்லாம் வாசற்கட்டிலிருந்து கொண்டு மேகங்களைப் பார்ப்பாள்.

வாய்க்கும்போதெல்லாம் குழந்தையைப்போல தன்னையும் அழைத்து மேகங்களை வேடிக்கை காட்டுவாள். மெய்யாகவே அவள் குழந்தைதான். வேடிக்கை பார்க்கும் குழந்தை.

'எல்லாமே வேடிக்கைதான்' என்று தனக்குள் சொல்லிக்கொண்டார். தான் செய்து கொண்டிருப்பதை நினைக்க அவருக்கே சிரிப்பாக கேலியாக இருந்தது. "இந்த மாதிரி சும்மா சும்மா எதையாவது எவராவது எழுதிக் கொண்டிருப்பார்களா? அறிந்தால், தன்னைப் பைத்தியம் என்றுதான் சிரிப்பார்கள். தாங்கள் எண்ணியதெல்லாம் சரிதான் என்று சொல்வார்கள்" என்று ஒரு கணம் பட்டது. மகள் கூட என்ன நினைப்பாள்? அவளுக்கு இது துக்கமாக இருக்கலாம்.

ஆனாலும் இதில் ஒரு இனிமை, ஈடுபாடு உள்ளதாகத் தோன்றியது. யாருக்குமே தொந்தரவில்லாமல் எதையும் செய்யலாம். அதையிட்டு மற்றவர்கள் ஏன் அச்சமடைய வேண்டும்?

உலகத்தில் எத்தனை விதமான ஆட்கள் இருக்கிறார்கள்? எத்தனை விதமான சங்கதிகள் உள்ளன? ஒவ்வொன்றும் அவரவர் விருப்பம்தானே! எனக்கு இது பிடித்திருக்கிறது. எல்லோரும் தாங்கள் விரும்புகிறபடி வாழத்தானே விரும்புகிறார்கள்! வாழ்வின் இறுதிப் பருவத்திற்கூட என்னுடைய விருப்பத்துக்கு ஏற்ற மாதிரி வாழ முடியாதா? பத்தொன்பது வயதில்தான் என்னுடைய விருப்பத்தை இழந்தேன். இந்த எண்பத்தி நான்கு வயதிலும் அதை இழக்க வேணுமா? விருப்பமான ஒரு பெயரை எழுதுவதற்கு, அந்தப் பெயரைச் சத்தமிட்டுச் சொல்வதற்கு என்னால் முடியாதா?

திரும்பி, வீட்டுக்குள்ளே வந்தவர், மளமளவென்று எழுதத் தொடங்கினார். எழுதிக் கொண்டேயிருந்தார்.

அறைக்குள் நோட்டுப் புத்தகங்கள் நிறைந்து கொண்டிருந்தன. எல்லாவற்றைப் பற்றியும் எழுதினார். தன்னுடைய வாழ்நாளில் நடந்த நிகழ்ச்சிகள், வெள்ளம் பெருக்கெடுத்தோடியது, ஆடுகள் காணாமற்போனது, படையினர் ஊருக்குள் வந்தது, இடம்பெயர்ந்து வேறிடத்துக்குச் சென்றது, அரசியற் போராட்டங்கள், , இயக்க மோதல்கள் நடந்தது, படையினரால் சுட்டுக் கொல்லப்பட்ட ஆட்கள், ஊரில் உள்ள கள்வர்கள், களவு கொடுத்த ஆட்கள், சிறைப்பிடிக்கப்பட்டவர்கள், கள்ளக் காதல் வைத்திருந்தவர்கள், காதல் நிறைவேறவில்லை என்று தூக்குப் போட்டவர்கள், கடன் தொல்லை தாங்க முடியவில்லை என்று தோட்டத்தில் நஞ்சருந்திச் செத்தவர்கள், பாதியில் படிப்பை நிறுத்திக் கொண்டவர்கள், ஊரை விட்டுப் பிழைப்பதற்காக வெளியூர் சென்றவர்கள், வெளிநாட்டுக்குத் தப்பியோடியவர்கள்... காணாமலாக்கப்பட்ட பெறாமகன்... அவனுக்கும் தனக்குமான உறவு... இப்படியே தினமும் எதையாவது எழுதிக் கொண்டேயிருந்தார்.

ஒரு விளையாட்டாக, எதேச்சையாகத் தொடங்கிய இந்த எண்ணங்களின் விளையாட்டு, இப்படிப் பெரிய காடுபோலச் சடைத்து அவரையே மூடிவிடும் அளவுக்கு வளரும் என்று அவர் எண்ணவேயில்லை. இதற்கு என்ன பெயர் வைக்கலாம் என்று யோசித்தார். என்ன பெயர் வைத்துத்தான் என்ன? ஆனால், இந்த எண்ணங்களின் வழியே போய்க்கொண்டிருப்பது மகிழ்ச்சியாகத்தானிருந்தது.

சட்டென்று அவருக்கொரு சந்தேகம் முளைத்தது. தன்னிடம் நிகழ்ந்து கொண்டிருப்பது, நினைவுகளின் எழுச்சியா அல்லது எண்ணங்களின் பேரெழுச்சியா? நினைவுகள் இனிமையைத் தருவதாக இருக்கலாம். நிகழ்காலமொன்று கடந்த காலமாகிக் கனியும்போது மறைந்து கொண்டுபோகும் அந்த நிகழ்காலம் இனிக்கத் தொடங்குகிறது. இனித்தாலும் அதற்கு என்ன பெறுமதியுண்டு? நிறைவேறாத கனவுகளின் சுடுகாடு அதுவல்லவா! அதைப்போல எல்லோரிடமும் ஏராளமான சுடுகாடுகளுண்டு. அதையெல்லாம் அவர்கள் மீட்டிப் பார்த்துக் கொள்ளலாம். இப்போதவை இனிக்கக் கூடும்.

அதற்கப்பால்?

நினைவுகளுக்கப்பால், மனதில் எழுகின்ற கேள்விகள், தோன்றுகின்ற பதில்கள், மோதுகின்ற கருத்துகள் அவை கொண்டு செல்கின்ற முடிவற்ற இடங்கள்தானே எண்ணங்களின் விரிவு... அது வாழ்க்கையைப் பற்றிய, பண்பாட்டைப் பற்றிய, சூழலைப் பற்றிய, மனிதர்களுடைய உளவியலைப் பற்றிய, இயற்கையைப் பற்றிய எதுவாகவும் இருக்கலாம். அதை எழுதினாலென்ன? என்ற கேள்வி எழுந்தது. அதை எழுதினார்.

முன்பெல்லாம் பொழுதையே கழிக்க முடியாதிருந்தவருக்கு, இப்போது பொழுதே காணாமலிருந்தது. சாப்பிட்டு முடித்தவுடன் சற்று ஓய்வாகக் கூட இருப்பதில்லை. அப்படியே தன்னுடைய அறைக்குச் சென்றவுடன் இருந்து எழுதத் தொடங்கி விடுகிறார். குளித்துவிட்டு வந்தாலும் கூட அப்படித்தான். ஏன் கடைக்கோ அல்லது ஏதாவது அலுவலாக வெளியே சென்று திரும்பினாலோ திரும்பி வந்தவுடன் கால்களைக் கழுவிக் கொண்டு வந்து நோட்டுப் புத்தகத்தை விரித்து எழுதுகிறார். அதற்குப் பிறகுதான் அடுத்த வேலை. சாப்பாடு, தேநீர் எல்லாம் இரண்டாம் பட்சமாகிவிட்டன.

இப்படி வெறிகொண்டு எதைத்தான் எழுதுகிறார்? என்ற சந்தேகம் மகளுக்கு. முன்பே அப்பாவுக்கு தினக்குறிப்பு எழுதும் பழக்கம் உண்டுதான். ஆனால், அது இப்படி இருந்ததில்லை.

ஒரு நாள் அதை அவரிடமே கேட்டாள், "அப்பா, அப்படி என்னதான் எழுதுறீங்கள்? ஏதாவது கதை கிதை? எப்பப் பார்த்தாலும் ஏதோ எழுதிக்

கொண்டிருக்கிறியள்? புதிசாகப் பாரதம் ஏதுமோ... அல்லது அம்மாவைப் பற்றிய சரித்திரமா!" என்று சிரித்தாள்.

மகள் இப்படிக் கேட்டதும் ஒரு கணம் அதிர்ச்சியாக இருந்தது. அவளுக்கு என்ன பதில் சொல்வதென்றே புரியவில்லை. அதுவும் அம்மாவைப் பற்றியா எழுதுறீங்கள்? என்றே கேட்டுவிட்டாள்.

மறுகணம் சுதாகரித்துக் கொண்டார்.

"சும்மா பலதையும் பத்தையும் எழுதிப் பார்க்கிறன். பொழுதும் போக வேணுமே! ஒண்டும் செய்யாமல் இருந்தால்தான் வருத்தம் வருமாம்... பிள்ளை" என்றார்.

அதைப் பொய் என்றே அவள் எடுத்துக்கொள்வாள் என்றும் அவருக்குத் தெரியும். ஆனால், அவளை அப்போது சமாளித்துக் கொண்ட நிறைவு அப்போது உண்டானது.

அப்பா எழுதுவதை அறிய வேணும் என்றிருந்தாலும் அவராகவே காட்டாத வரையில் அல்லது அவராகவே அதைப் பற்றிச் சொல்லாத வரையில் அதைப் பார்க்கக் கூடாது என உறுதியாக இருந்தாள். முதுமை, அவருக்கு ஏற்பட்டிருக்கும் தனிமை போன்ற காரணங்களால்தான் அப்பா அப்படி இருக்கிறார் என்று எண்ணினாள்.

அவர், அம்மாவோடு இருந்த காலத்தில் அவரைப் பற்றி அவள் இந்தளவுக்கு எந்த அக்கறையும் கொண்டதில்லை. சேர்ந்து சாப்பிடும்போது அப்பாவோ அம்மாவோ எதையும் சொல்லிக் கொள்வார்கள். சிலவேளை அம்மாதான் சிலதைச் சொல்வா. அதுவும் அப்பாவின் சார்பாகக்கூட.

இப்பொழுது எல்லாமே மாறிவிட்டன. இதெல்லாம் யாரும் எதிர்பார்க்காதவை. நாம் எதிர்பார்க்கின்ற விசயங்கள்தான் எப்போதும் நடக்கின்றவா? எவ்வளவோ விடயங்கள் நம்முடைய எதிர்பார்ப்புகள், விருப்பங்களுக்கு மாறாகத்தானே நடக்கின்றன.

**கா**லையில் மகள் வேலைக்குப் புறப்பட்டுப் போனதும் முற்றத்தில் வந்து நின்று சற்று நேரம் வானத்தை அண்ணாந்து பார்த்தார் முத்துலிங்கம். நீலப்பட்டாக விரிந்து பளிச்சென ஒளிர்ந்தது வானம். ஒரு துண்டு மேகமில்லை. அதுதான் தன்னுடைய மனது என்று நினைத்தார் முத்துலிங்கம். அந்த நீல வெளியில் இரண்டு பறவைகள் தொலைவில் பறந்து போய்க் கொண்டிருந்தன. எங்கே அவை போகக் கூடும்? எங்கிருந்து வருகின்றன? என்று தனக்குள்ளே கேட்டுக்கொண்டார்.

அந்த இரண்டு பறவைகளையும் பார்க்க, தானும் மனைவியும் இணைந்து செல்வதைப்போலிருந்தது. அப்படி இணைந்து போவது எந்தப் பிராயமாக இருக்கும்? இளமைக் காலமா? அல்லது முதுமையின்போதா? அல்லது இடைக்காலமா? எந்தக் காலத்தில் தங்களுக்கிடையில் கூடுதலான அன்னியோன்னியம் இருந்தது என்று நினைத்துப் பார்த்தார்.

"உங்களுக்கு முத்துலிங்கம் எண்டு பேர் வைச்சதுக்குப் பதிலாக முத்தலிங்கம் எண்டு வைச்சிருக்கலாம்..." என்று நெஞ்சோடணைந்தபடி சிரித்தாள் மனைவி. அது நடுப்பருவக் காலம். அந்தக் காலத்தில் தித்தித்த முத்தம் அது. அந்தக் காட்சி நிழலாடியது.

ஒவ்வொரு காலமும் ஒவ்வொரு விதமாக இருந்தது. ஒவ்வொன்றிலும் தித்திப்பிருந்தது. காலம் கடந்தால் அத்தனையும் இனிக்கும் நினைவுகளாக மாறுவதெப்படி?

அந்தப் பறவைகள் தொலைவில் மறைந்தது போலாகி மீளத் தோன்றின. நேரே அவரை நோக்கி வந்தன. அவற்றில் ஒன்று, தான். மற்றது அவள் என்றெண்ணிக் கொண்டு அவளுடைய பெயரை மெல்லச் சொன்னார். பதிலுக்குச் சத்திட்டது அவற்றிலொன்று. அது அவளுடைய குரலைப்போலத் தோன்றியது.

**எ**ழுதியதையெல்லாம் எடுத்துப் பார்க்கலாமா என்றொரு நாள் யோசித்தார். அப்படிப் பார்க்கும்போது, அதெல்லாம் தேவையில்லை என்று தோன்றினால்... எரித்து விடலாமா, அல்லது எல்லாவற்றையும் கட்டி ஒரு ஓரமாக வைத்து விடலாமா? என்ற கேள்வி எழுந்தது. அப்படியே அவற்றைக் கட்டிப் பாதுகாப்பாக வைத்தார். எழுதுவதை மட்டும் நிறுத்தவில்லை. இதை எப்படிவிட்டு ஒதுங்குவது என்று அவருக்குப் புரியவேயில்லை. அப்படி ஒதுங்கத்தான் வேணுமா என்ற கேள்வியும் எழுந்தது.

யாருக்கும் தீங்கில்லாத வரை அதனோடு விளையாடிப் பார்க்கலாம் என்று எண்ணினார். அந்த எண்ணத்தில்தான் இத்தனை நாளாக இந்த விளையாட்டு நடந்து கொண்டிருக்கிறது.

மனிசரெண்டால் ஏதாவது இருக்கும். எதையாவது யோசிக்கிறது. எதையாவது செய்து பார்க்கிறது... இல்லாவிட்டால் இந்த உலகம் இப்படி ஆகியிருக்குமா?

வெளியே வந்து, வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார் முத்துலிங்கம். ஏதுவோ தோன்ற தன்னுடைய பெயரைச் சொல்லிப் பார்த்தார், "முத்துலிங்கம்." அப்படியே அவளுடைய பெயரையும்.

நீலமும் சிவப்பும் கலந்ததாகக் கரைந்திருக்கும் அடிவானத்தில் ஒற்றையாக நின்றது பனை. கூர்ந்து பார்த்தார். அது ஒற்றைப் பனைதான்.

மெல்லியதொரு சிரிப்பு வந்தது முத்துலிங்கத்துக்கு.

*mail to:* **poompoom2007@gmail.com**

## தருமமிகு சென்னை - 12

# தி. நகரும் தமிழ் பதிப்புப் பணியும்

எண்பதுகளின் முற்பகுதியில் திருவல்லிக்கேணி மேன்ஷன்களில் மணமாகாத இளைஞனாக வலம் வந்துகொண்டிருந்த காலத்தில் ஒரு நாள் தி.நகர் என்கிற தியாகராய நகருக்கு நண்பர்களுடன் செல்ல நேரிட்டது.

● **சந்தியா நடராஜன்**

*அப்போதுதான் சரவணபவன் காபியும் சாப்பாடும் அறிமுகமானது. மாயவரம் காளியாகுடி டிகிரி காபிக்கு நிகர் என்று சொல்ல முடியாவிட்டாலும் சென்னை வந்தபிறகு ருசித்த மிகச் சிறந்த காபி என்ற உணர்வு மேலிட்டது.*

*சாப்பாட்டு மேசையைத் துடைப்பதற்கென்றே தனி ஆள். குடித்த காபி டம்ளரை அடுத்த வினாடியே அகற்றுவதற்குத் தனி ஆள். குறிப்பாக ஈ மொய்க்காத மேசை. தண்ணீர்க் குவளைகளை விரல்விட்டுக் கொண்டுவராத பணியாட்கள். இப்படி அன்றைய உடுப்பி ஓட்டல்களில் இருந்து வேறுபட்ட தனிரகமாகக் காட்சியளித்தது தி.நகர் சரவண பவன். பிறகென்ன? ஞாயிற்றுக்கிழமை தோறும் சாப்பிடுவதற்கென்று 13ஆம் நம்பர் பஸ்ஸில் தி.நகர் வருவது வழக்கமாகிப் போனது.*



*அப்போது கவிஞர் இளையபாரதி தி.நகர் ரங்கநாதன் தெரு சுகந்தி மேன்ஷனில் தங்கியிருந்தார். அவ்வப்போது சந்தித்துக் கொள்வோம்; சுற்றித் திரிவோம். நான் தங்கியிருந்த முருகேச நாயக்கர் மேன்ஷனை மூடப்போவதாகவும் புதிதாக யாருக்கும் அறை கொடுப்பதில்லை என்றும் அதை நிர்வகித்து வந்த பாஸ்கரன் சொல்லி வந்தார். இந்த நிலையில் நானும் எனது பள்ளித் தோழன் பேராசிரியர் ராஜசேகரனும் இளையபாரதியின் ஏற்பாட்டில் சுகந்தி மேன்ஷனுக்கு வந்து சேர்ந்தோம். இன்று திரைப்படத் துறையில் ஓயாது இயங்கிவரும் ஆர்.டி. ராஜசேகர், 'தினமணி' ஆசிரியர் கி. வைத்தியநாதன் உள்ளிட்ட பலரும் சுகந்தி மேன்ஷனில் தங்கியிருந்தார்கள். சமீப காலம் வரை தினமணியில் பணியாற்றி ஓய்வு பெற்றிருக்கிற ராஜ்கமல் கண்ணனும் அவரது சகோதரரும் சுகந்தி மேன்ஷனிலிருந்து நடக்கும் தூரத்தில் இருந்தார்கள். அவர்களும் மாயவரத்துக்காரர்கள்.*

*ஆர்.டி. ராஜசேகருக்கு மாயவரத்துக்கு அருகில் உள்ள குத்தாலம்தான் சொந்த ஊர். பின்னர் அவர் மாயவரத்து மருமகன் ஆனார். அவரது மாமனார் மருதசாமி மாயவரம் தலைமை அஞ்சல் அலுவலகத்தில் பணியாற்றி ஓய்வு பெற்றவர். கலை இலக்கியப் பெருமன்றத்தின் தீவிர செயற்பாட்டாளர், பெரியாரிஸ்ட். இன்று ஆயிரம் பிறைகள் கண்டுவிட்ட மருதசாமி களைப்பறியாத ஆசாமி. அன்பன்றிப் பிறிதொன்று அறியாத மருதசாமி அயராது பயணம் செய்துகொண்டே இருக்கிறார்.*

*இப்படித்தான் இடம்பெயர்ந்த ஊர்க்காரர்களின் உலகமாகத் தி.நகர் ரெங்கநாதன் தெரு என்னைப் பிணித்தது.*

*அன்று எனக்குப் பழைய விமான நிலையத்தில் 'இன்டெலிஜன்ஸ்' பிரிவில் பணி. அல்லும் பகலும் வேலை இருக்கும். நான் புதிதாகச் சேர்ந்த அதிகாரி, இளைஞன், மணமாகாதவன். இந்த மூன்று காரணங்களும் என்னை மீனம்பாக்கத்திலேயே முடக்கிப்போடப் போதுமானதாக இருந்தன. எப்போதாவது ஓய்வு கிடைக்கும். உறங்கவும் இளைப்பாறவும் குளித்துவிட்டுக் கிளம்பவும் மட்டுமே சுகந்தி மேன்ஷன் சுகமளித்தது. சமயத்தில் ரெங்கநாதன் தெரு முனையில் அன்பழகன் பழரசக் கடைக்குப் பக்கத்தில் இருந்த கோமதி சங்கர் ஸ்வீட் ஸ்டால் அல்வா மட்டுமே பசியாற்றும். அதன் விளைவு இப்போது உணவின் அளவு குறைந்து மருந்தே உணவாகியிருக்கிறது. ஆனால், இன்னமும் கோமதி சங்கரின் மோகினியாட்டத்திற்கு அடிமைப்பட்டுத்தான்*




கிடக்கிறது நாக்கு. அவசரத்திற்கு நாதன் கஃபே இருந்தது. எதிரே கீதாஞ்சலியில் கோதுமை உப்புமா கிடைக்கும். கூட்டம் இருக்காது. தற்போது நாதன் கஃபேயும் கீதாஞ்சலியும் மறைந்து போய்விட்டன. அமர இடம் கிடைக்காமல் கூட்டம் வழியும் சரவண பவன் இருந்த இடத்தில் இல்லை. முருகன் இட்லி கடை அந்த இடத்தைக் கைப்பற்றிவிட்டது. சரவண பவன், பக்கத்திலிருக்கும் மகாலட்சுமி தெருவில் ஒதுங்கிக் கொண்டது. அப்போது வானுயர்ந்த நல்லி 100. சென்னை சில்க்ஸ், போத்திஸ் போன்ற துணி மாளிகைகள் வரவில்லை. ஜி.ஆர்.டி. தங்க மாளிகை மட்டுமே இருந்தது. அதுவும் மதிய வேளையில் ஒரு சில மணி நேரம் இடைவேளை விட்டுவிடும். ஆனாலும் அதன் வாசலில் நகை மோகிகள் காத்திருப்பார்கள். தி.நகரின் வசீகரம் அப்படி.

எதிரே வாணி மியூசிக்கல் கடையில் எம்.எஸ்ஸோ, சுதாவோ, ஜேசுதாசோ ஒலி நாடாக்களின் சுழற்சியில் பாடிக் கொண்டிருப்பார்கள். ரெங்கநாதன் தெரு முனையிலிருந்து லலிதா ஜூவல்லரி வரையில் காலை நேரத்தில் நடைப்பயிற்சி செய்யலாம். இன்று உஸ்மான் சாலையே ரெங்கநாதன் தெருவாகிவிட்டது. நடைபாதை நடப்பதற்கல்ல என்று போர்டு மாட்டாததுதான் குறை. பார்க்கும் தெருக்களில் எல்லாம் அடுக்குமாடி துணிக்கடைகள், நகைக்கடைகளின் ‘பார்க்கிங்’ இடங்கள் தென்படுகின்றன. கடைகளில் வேலை பார்க்கும் சீருடைப் பெண்களின் தங்கும் விடுதிகள் நிறைந்து கிடக்கின்றன. உஸ்மான் சாலை மேம்பாலம் தி.நகர் பேருந்து முனையில் தொடங்கி நியூ புக் லேண்ட்ஸ் தாண்டி ஜி.ஆர்.டி. ஜூவல்லர்ஸ் வரை நீண்டு கொண்டே செல்கிறது. கட்டி முடித்து மக்கள் பயன்பாட்டில் உள்ள இந்த மேம்பாலத்தின் ஒரு பகுதி இடிக்கப்பட்டு வருகிறது. வரப்போகும் மெட்ரோ ரயிலுக்காகக் குற்றுயிரும் குலையுயிருமாக நிற்கிறது தனது வாலிப வயதில் இந்த மேம்பாலம். மேம்பாலத்தின் கீழேயும் வளையல், ஜிமிக்கி முதல், உள்ளாடை, தளர்வாடை, சுரிதார் வரை எல்லாக் கடைகளும் கடைவிரித்துக் கல்லாக் கட்டுகின்றன. இருபுறமும் உள்ள நடைபாதையிலும் கடைகள். நடுரோட்டிலும் கடைகள். இடையிடையே பானிபூரி கடைகளும் பேல்பூரி கடைகளும் ஃப்ரூட் சாலட் கடைகளும் குளிர்பானக் கடைகளும் மக்கள் இயக்கத்திற்கு முட்டுக்கட்டை போட்டபடி இருக்கின்றன. அவசர காரியமாகச் செல்பவர்கள் நடைபாதையில் தட்டும் கையுமாய் உணவருந்தி மகிழும் கூட்டத்தினரிடம் தமது நரசிம்ம முகத்தை வெளிக்காட்டியபடி செல்கிறார்கள்.

தி.நகர் மேம்பாலம் வந்த பிறகு சில வணிக நிறுவனங்களுக்குப் போக்குவரத்து நெருக்கடியால் வியாபாரம் குறையத் தொடங்கியது. 199596 வாக்கில் நல்ல மனிதர் நர்மதா ராமலிங்கம் உஸ்மான் சாலையில் இலக்கம் 52சிஇல் ‘நியூ புக் லேண்ட்ஸ்’ என்ற புத்தகக் கடையை உருவாக்கினார். ஒரு காலகட்டத்தில் எழுத்தாளர்கள், வாசகர்களின் சந்திப்புப் புள்ளியாக இருந்தது ‘புக் லேண்ட்ஸ்’. சென்னையில் தமிழ் நூல்களுக்கான பிரத்யேக மையமாக இயங்கியது. சமீபத்தில் அதன் இயக்கம் நின்றுபோனது வருத்தத்துக்குரிய செய்தி. அதற்கு மேம்பாலமும் ஒரு காரணம். வாசகர்களின் விருப்பம் அறிந்து புதிய

நூல்களைப் பரிந்துரை செய்து, வேண்டிய நூல்களைத் தருவித்துத் தந்து உதவி வந்த புக்லேண்ட்ஸ் சீனிவாசன் தொடர்பும் அறுந்து போய்விட்டது.

நர்மதா பதிப்பகம் ராமலிங்கம் தஞ்சை ஜில்லாகாரர். பூர்வீகம் மாயவரம் பக்கம்தான். அவரது உறவினரான கலைஞன் பதிப்பகம் மாசிலாமணிக்குச் சொந்த ஊர் திருமருகல். சிவபெருமான் பிள்ளைக்கறி கேட்டு, சிறுத்தொண்ட நாயனாரைச் சோதித்து அருள்பாலித்த திருச்செங்கட்டாங்குடி என்ற ஊரிலிருந்து ஒரு ஐந்து கிலோ மீட்டர் தொலைவில் இருக்கிறது திருமருகல். புக் லேண்ட்ஸ் நிறுவனம் மூடப்பட்ட நிலையில் இருந்தாலும் ராமலிங்கத்தின் மகன் யாருக்கும் பாக்கி வைக்கவில்லை. இருந்த நூல்களை உரியவர்களுக்குத் திருப்பி அனுப்பிவிட்டு விற்பனைத் தொகையைச் சரியாகச் செலுத்தியிருக்கிறார். 'இவன் தந்தை எந்நோற்றான் கொல்?' என்னும் சொல் இவருக்குப் பொருந்தும்.

தியாகராய நகருக்கும் தமிழ் நூல்களுக்கும் மிகப்பெரிய பந்தம் உண்டு. குறிப்பாக நகரத்தாரின் தமிழ்ப்பணி. சக்தி வை கோவிந்தன், ஏ.கே செட்டியார் காலத்திலிருந்து நாட்டுக்கோட்டை செட்டியார்கள் பதிப்பகத் துறையில் தொடர்ந்து செயலாற்றி வருகிறார்கள். ''சொன்னால் நம்ப மாட்டீர்கள்' என்ற தன் வரலாற்று நூலை எழுதிய சின்ன அண்ணாமலையைப் பதிப்பகத் துறைக்கு இழுத்து வந்தவர்கள் ஏ.கே.செட்டியார், சக்தி வை. கோவிந்தன் என்ற இரு மாபெரும் பதிப்பாளர்கள். சின்ன அண்ணாமலையை அடியொற்றி வந்தவர்களில் வானதி திருநாவுக்கரசும் மணிமேகலைப் பிரசுரம் தமிழ்வாணனும் குறிப்பிடத்தக்கவர்கள். முல்லை பதிப்பகம் முத்தையாவும் மணிவாசகர் பதிப்பகம் நிறுவனர் மெய்யப்பனும் சைவமும் தமிழும் போற்றும் செட்டியார் இனத்தவர்கள்தான். அநேகமாக இவர்கள் எல்லோருமே தியாகராய நகரில் கடை வைத்தவர்கள் அல்லது தியாகராயநகர் வாசிகளாக வாழ்ந்தவர்கள். இந்தச் செட்டியார்களின் நகரம் பூம்புகார் என்று சொல்கிறார்கள்.

பூம்புகாரில் இன்று இரண்டு வனங்கள் உள்ளன. ஒன்று சாயவனம். சா.கந்தசாமியின் சாயவன நாவலின் கதைக்களன் இதுவே. சாயவனத்திற்குப் பக்கத்தில் இருப்பது பல்லவனம். ஆண்டுதோறும் பட்டினத்தார் பெருவிழா நடக்கும் பல்லவனீஸ்வரர் திருக்கோயில் இருக்கும் இடம் பல்லவனம். ஆயிரக்கணக்கான காரைக்குடிச் செட்டியார்கள் பட்டினத்தார் பெருவிழாவில் கலந்துகொண்டு வந்தார்கள். பத்து நாள் வரை இங்குள்ள செட்டியார் சத்திரத்தில் டேரா அடித்து தங்கும் நாட்டுக்கோட்டை செட்டியார் குடும்பங்களும் இருந்தன. இப்போது எல்லாம் அருகி வருவது போல, இந்த விழாவும் பழைய பொலிவு குன்றி வருகிறது.




இப்படிச் சாயவனம், பல்லவனம் என்றில்லாமல் இன்னும் பல வனங்கள் இருந்தனவாம். பூம்புகார் நகரை ஆழிப்பேரலை தாக்கியபோது அவை அழிந்து போயினவாம். அதற்குப் பிறகு துறைமுக நகராக இருந்த பூம்புகார் நகரத்து வணிககுலத்துச் செட்டியார்கள் 'பதியெழ அறியா' பூம்புகார் நகரத்தை விட்டு அகன்று வானம் பார்த்த பூமியான காரைக்குடிக்கு இடம்பெயர்ந்தார்கள். அங்கேயும் வெள்ளம் வந்துவிடுமோ எனப் பயந்து தமது வீடுகளைத் தரையிலிருந்து உயரமாகக் கட்டினார்கள். சில வீடுகளுக்குள் செல்வதென்றால் பதினெட்டாம்படி ஐயப்பனைப் பார்ப்பதற்குப் படியேறுவது போலிருக்கும். இவர்களையும் காவிரிக்கரைக்காரர்கள் எனறு எடுத்துக்கொள்ளலாம். இன்றைக்குக் குறிப்பாகக் கலைஞன் பதிப்பகம், நர்மதா பதிப்பகம், சந்தியா பதிப்பகம், வ.உ.சி பதிப்பகம், நிவேதிதா பதிப்பகம் ஆகிய ஐந்து பதிப்பகங்களும் மாயவரத்துக்காரர்களால் / மாயவரத்தைச் சார்ந்தவர்களால் நடத்தப்பட்டு வருகின்றன.

படிக்கும் நூலைப் படைக்கும் பதிப்பகங்கள் தியாகராய நகரில் தெருவுக்குத் தெரு இருப்பதில் ஆச்சரியமல்ல. பட்டு நூலில் நெசவு செய்து காஞ்சியிலிருந்து வரும் பட்டுப்புடவைகளை தி.நகரில் விற்பனை செய்யும் முதலாளிகளும் படைப்புலகின் புரவலர்களாகவும் படைப்பாளிகளாகவும் இருப்பதுதான் நிஜம், ஆச்சரியம், அற்புதம். பனகல் பார்க் எதிரே உள்ள நல்லி சில்க்ஸ் நிறுவனத்தின் அதிபர் நல்லி குப்புசாமி செட்டியார், 'தியாகராயநகர் அன்றும் இன்றும்' என்று தி.நகர் குறித்து ஒரு நூல் எழுதியிருக்கிறார். 'தமிழ்ப் பதிப்புலகம் ஓர் அறிமுகம்' என்பது அவரது இன்னொரு முக்கியமான நூல். நிர்வாக மந்திரங்கள், ஆயிரம் இரவு ஒன்றே கனவு, ஆத்திசூடியில் நிர்வாகம், எல்லோருக்கும் வணக்கம், பாரதி போற்றிய சான்றோர்கள்: சில பார்வைகள், பழமொழிகளில் நிர்வாகம், நீதி நூல்களில் நிர்வாகம், சுக்ரநீதி உள்ளிட்ட நாற்பதுக்கும் மேற்பட்ட நூல்களைப்

படைத்துள்ளார். பாரதியியல் சார்ந்தும் சில நூல்களைப் பதிப்பித்துள்ளார். குறிஞ்சிவேலனை ஆசிரியராகக் கொண்டு வெளிவரும் 'திசை எட்டும்' மொழிபெயர்ப்பு இதழும் ஆண்டுதோறும் நடைபெற்றுவரும் 'நல்லி திசை எட்டும்' விருது வழங்கும் நிகழ்வும் செட்டியாரின் வள்ளன்மையால் இழையறாது நாடறிய நகரறிய நிகழ்ந்த வண்ணம் உள்ளன.

பாரதியின் கால வரிசைப்படுத்தப்பட்ட படைப்புகளின் தொகுப்புப் பணியில் ஈடுபட்டிருந்த சீனி விசுவநாதனுக்கு அனைத்து வகைகளிலும் உதவி செய்து வந்தவர் நல்லி செட்டியார்தான். இயல் இசை நாடகம் என முத்தமிழின் வளர்ச்சிக்கு முன்வந்து நிற்பவர் இவர். 'பணியுமாம் என்றும் பெருமை' என்ற குறளடியை மட்டும் பல்லாயிரம் முறை படித்திருப்பார் போலும். இவர் பங்கேற்கும் மேடையில் உரை நிகழ்த்துபவர் இவர் பெயரைக் குறிப்பிடும்போதெல்லாம் அமைதியாக எழுந்து நின்று அவைக்கு வணக்கம் தெரிவிக்கும் பழக்கம் கொண்டிருப்பதைப் பலமுறை கண்டிருக்கிறேன். காஞ்சிபுரத்தில் ஒற்றைத் தறியுடன் வாழ்க்கையைத் தொடங்கியவர் இவரது தந்தையின் தந்தை. அவர் சென்னைக்கு இடம் பெயர்ந்தபோது தி.நகர் உருவாகி ஐந்தாறு ஆண்டுகளே ஆகியிருக்கலாம். தி.நரின் பூர்வ குடிகளில் செட்டியாரின் குடும்பமும் ஒன்று. நல்லி செட்டியாரின் தந்தை 1953இல் இறந்துபோனார். அப்போது இவருக்கு வயது 13. ஒரு குடும்பத்தின் ஐந்து தலைமுறையினரும் நல்லி சில்க்ஸ் கடையின் வாடிக்கையாளர் என்ற புகழுரையைப் பெற்றிருக்கிற செட்டியார் உழைப்பால் மட்டும் வளரவில்லை. அன்பாலும் பண்பாலும் வளர்ந்தவர். பத்மஶ்ரீ விருதும் பெற்றவர். தூர்தர்ஷன் முன்னாள் இயக்குநர், மறைந்த ஏ.நடராஜன், செட்டியாரின் அன்பிற்குரியவர். பாண்டி பஜாரில் ஸ்டுடியோ வைத்திருக்கும் புகைப்படக் கலைஞர் யோகாவும் 'குங்குமம்' வளர்நிலை காலத்தில் அதன் வளர்ச்சிக்குப் பாடுபட்ட பத்திரிகையாளர் பாவை சந்திரனும் இன்று மட்டுமல்ல, ஏழேழ் பிறவிக்கும் செட்டியாரின் உற்ற நண்பர்களாக இருப்பார்கள். இவ்விருவரின் தோழமை கிடைக்கப் பெற்றவன் நான்.


நல்லி குப்புசாமி


ஆதம்


செல்லையா


டி.கே. சந்திரன்

நல்லி செட்டியாரைப் போலவே தமிழ் நூல்களுக்கு புரவலராக இருக்கும் இன்னொரு துணிக் கடை அதிபர் சென்னை சில்க்ஸ் நிறுவனத்தின் நிர்வாக இயக்குநர் டி.கே. சந்திரன். இவர் 'அறக்கயிறு' என்ற நூலின் ஆசிரியர். கடந்த அக்டோபர் முதல் நாள் எழும்பூர் மியுசியம் தியேட்டரில் நடந்த காந்தி உலக அறக்கட்டளையின் முதன்மைப் பெண்கள் விழாவில் மட்டும் சென்னை சில்க்ஸ் சுமார் 1 லட்சம் மதிப்புள்ள நூல்களை கல்லூரி மாணவிகளுக்கு வழங்கியது. மதுரையை மையமாகக் கொண்டுள்ள திருப்பூர்க்காரான டி.கே.சந்திரன் ஒரு நெசவாளியின் மகன். சென்னை சில்க்ஸ் தமிழகம் எங்கும் துணி விற்பனையில் கோடிக் கணக்கில் கொடி கட்டிப் பறக்கிறது. டி.கே.சந்திரனின் தொழில்நுட்ப ஆர்வமும் அறிவும் வியக்க வைக்கும். அதை விட இவரது சமூக அக்கறையே காணக் கிடைக்காதது.

பாவை சந்திரனின் 'நல்ல நிலம்' நாவலும் சா.கந்தசாமியின் 'சாயவனம்' நாவலும் கீழ்த்தஞ்சை மாவட்டத்தின், குறிப்பாக முறையே காவிரிப்பூம்பட்டினம், நாகப்பட்டினம் பகுதி மக்களையும் மண்ணையும் சமூக அமைப்பையும் முன்னிறுத்தியிருக்கிற நாவல்கள். பார்க்கும்போதெல்லாம் பாவை சந்திரனிடம் ஒரு வேண்டுகோள் வைத்துவருகிறேன். 'நல்ல நிலம்' நாவலின் இரண்டாம் பாகம் வரவேண்டும் என்பதுதான் அது. தற்போது பாவை சந்திரன் தினமணி கதிரின் ஆசிரியராக இருக்கிறார். கண்மணி கிரியேட்டிவ் என்பது அவர் தி.நகரில் நடத்தி வரும் பதிப்பகத்தின் பெயர். பாவை சந்திரனுக்கு இரண்டு பெண்பிள்ளைகள். இருவரும் நல்ல கண்மணிகள். படித்து முடித்துப் பணியாற்றுகிற இருவரும் சேர்ந்து ராமாவரத்தில் அழகிய வீடு ஒன்றைக் கட்டி முடித்து, குடிபுகுந்திருக்கிறார்கள். புகுமனை புகுவிழாவுக்கு என்னையும் அழைத்திருந்தார் பாவை. செட்டியாரும் வந்து வாழ்த்திவிட்டுச் சென்றார். கடந்த பல ஆண்டுகளாகச் செட்டியாருடன் உடன் பயணிப்பவராக ஆங்கில 'தி ஹிந்து' நாளிதழில் பணியாற்றிய நடராஜன் இருக்கிறார். எம்.ஜி.ஆரிடம் காவல்துறை உயர் அதிகாரியாக (உளவுத்துறை) பணியாற்றிய

மோகன்தாஸ், ‘MGR The Man And The Myth’ என்று ஆங்கிலத்தில் ஒரு நூல் எழுதியிருக்கிறார். அந்த நூலைத் தமிழில் மொழிபெயர்த்தவர் இந்த ‘இந்து நடராஜன்’. மொழிபெயர்ப்புக்கு ஒரு வகை மாதிரி இந்த நூல்.

34 ஆண்டுகளுக்கு முன்பு மாயவரத்தில் என் திருமணம் நடந்தது. அப்போது தி.நகர் பாண்டி பஜாருக்கு பின்புறம் 14, கோபால கிருஷ்ண ஐயர் தெரு என்ற முகவரியில் வாடகைக் கட்டிடத்தில் இயங்கிவந்த மத்திய புலனாய்வுத் துறையில் புலனாய்வு அதிகாரியாகப் பணி செய்து வந்தேன். மண நாளுக்கு இரு மாதங்கள் முன்பிருந்தே பணிச்சுமை கூடியிருந்தது. தொடர்ந்து சென்னையில் பன்னாட்டுத் தொடர்புள்ள இரு கும்பல்களைக் கைது செய்தோம். ஓடிக்கொண்டே இருந்த எங்களுக்கு ஓய்வு மட்டும் கிட்டியபாடில்லை. திடீரென்று என்னைத் தூத்துக்குடிக்கு அனுப்பி வைத்தது அலுவலகம். அந்தச் சமயத்தில் அகில இந்திய அளவில் தொலைபேசி தந்தி இலாகாவின் தொழிலாளர் போராட்டம் வேறு நடந்து கொண்டிருந்தது. மணமகன் மணமகள் பெயர், மணநாள், திருமண மண்டப முகவரி, நேரம் உள்ளிட்ட தகவல்களை ஒரு பேப்பரில் எழுதி என் நண்பர் இளையபாரதியிடம் கொடுத்துவிட்டு திருமண அழைப்பிதழைத் தயாரித்து அச்சிட்டு வீட்டில் கொடுத்துவிடும்படி கூறிவிட்டு நான் தூத்துக்குடிக்குப் புறப்பட்டேன். அல்லும் பகலும் இடைவிடாது பணி தொடர்ந்தது. இறுதியில் சென்ற காரியம் வெற்றி பெற்றது. தூத்துக்குடி துறைமுகத்தின் வழியே கடத்தி வரப்பட்ட 1008 தங்கக் கட்டிகள் கைப்பற்றப்பட்டன. துறைமுக பொறுப்புக் கழகத்தின் உறுப்பினர் ஒருவரும் மற்ற கடத்தல்காரருடன் கைது செய்யப்பட்டார். எல்லாம் முடிந்து திருமணத்திற்கு முந்தைய நாளுக்கு முந்தைய நாள்தான் சென்னை வந்து சேர முடிந்தது. நான் மாயவரம் சென்றடையும் முன்பாகவே பாவையும் யோகாவும் இளையபாரதியுடன் மாயவரம் வந்துவிட்டார்கள். இருவரும் இளையபாரதி மூலமாகத்தான் எனக்கு அறிமுகமானார்கள். எனது திருமண அழைப்பிதழ் வரைவை பரிக்ஷா


பிரியா ஐயப்பன்




கே.என். சரஸ்வதி


நடேச சாஸ்திரி

ஞானியிடம் தயாரிக்கச் சொல்லி, அதை அப்படியே ஓவியர் மருதுவின் கையால் எழுதி வடிவமைக்கச் சொல்லி அச்சிட்டுத் தந்திருந்தார் இளையபாரதி. உவப்பத் தலைகூடிய நாட்கள் அவை. நீண்ட இடைவெளிக்குப் பின் யோகா என் மகன் திருமணத்திற்கு வந்து மணமக்களை வாழ்த்திவிட்டுச் சென்றார். யோகாதான் எனது திருமண நிகழ்வின் புகைப்படக்காரர்.

எனது திருமண ஆல்பம் கண்ணில் படும்போதெல்லாம் யோகா மனத்திரையில் வந்து விழுவார். கலைஞருக்கு நெருக்கமான புகைப்படக் கலைஞர். இவர் முரசொலி அறக்கட்டளையின் கலைஞர் விருதும் பெற்றவர். இவரது அகன்ற முகத்தில் எப்போதும் அமைதி தவழும். அன்றலர்ந்த தாமரையை ஒத்திருக்கும்.

1990 முதல் 1995 வரை தி.நகரில் இருந்த மத்திய வருவாய் புலனாய்வுத் துறைப் பணிக்குத் தேர்வு செய்யப்பட்டு நியமிக்கப்பட்டேன். தமிழ்நாடு, ஆந்திரா இரு மாநிலங்களுக்கும் ஒரு துணை இயக்குநர். இவ்விரு மாநிலங்களோடு கேரள கர்நாடக மாநிலங்களுக்கும் சேர்த்து ஒரு கூடுதல் தலைமை இயக்குநர். ஆக நான்கு மாநில சுங்க சட்டத்தின் கீழ் வரும் பொருளாதாரக் குற்றங்களைக் கண்காணிக்கும் அலுவலகமாக எமது அலுவலகம் இயங்குகிறது. ஐந்து ஆண்டுகளுக்கு மேல் பாண்டி பஜாருக்கும் பாலாஜி பவனுக்கும் செல்வது என்பது வாடிக்கையாகிப் போனது. பாலாஜி பவன் இருந்த இடத்தில் சாந்தா பவன் என்ற ஓட்டல் இருந்தது. அது கைமாறியதா பெயர் மாறியதா என்று தெரியாது. பாண்டி பஜாரில் காபிக்கு மட்டும் மாற்றிடம் தெரியவில்லை. பிரில்லியண்ட் டுடோரியலுக்கு எதிரில் ஒரு கையேந்தி பவன் இருந்தது. இரவு நேரத்தில் கூட்டம் கூடுமே தவிரக் குறையாது. கூட்டத்தில் பெண்களின் எண்ணிக்கையை விரல் விட்டு எண்ணிவிடலாம். கால மாற்றத்தில் இப்போது தி.நகரில் திரும்பிய இடமெல்லாம் நடைபாதை உணவகங்கள். குறிப்பாகப் பனகல் பார்க்கிலிருந்து ஜி.என்.செட்டி சாலைக்குத் திரும்புகிற இடத்தில் உள்ள கையேந்தி பவனுக்கு ஜோடி ஜோடியாக இளைஞர்கள்



இருசக்கர வாகனத்தில் வந்திறங்குகிறார்கள். வயது வித்தியாசம் என்று எதுவும் இல்லை. இணையகாலம் பெண்களுக்கு வழங்கியிருக்கிற கட்டற்ற சுதந்திரத்துக்கு இந்தக் கையேந்தி பவன்களும் சாட்சி.

தி.நகர் உருவாகி ஒரு நூற்றாண்டு ஆகிவிட்டது. 1916இல் திவான் பகதூர் சர்.பிட்டி தியாகராஜ செட்டி, சி.நடேச முதலியார், டாக்டர் டி.எம்.நாயர் ஆகிய மூவரால் நிறுவப்பட்டது நீதிக்கட்சி. இக்கட்சி South Indian Liberal Federation என்ற கூட்டமைப்பாகத்தான் உருவானது. 1923 முதல் 1926 வரை மெட்ராஸ் பிரசிடென்சியின் முதலமைச்சராக இருந்தவர் காளஹஸ்தி ஜமீன்தாரான பனகன்டி ராமராயநிங்கார் என்கிற பனகல் ராஜா. இவர் பெயர்தான் பனகல் பார்க்குக்குச் சூட்டப்பட்டிருக்கிறது. இவரது ஆட்சிக்காலத்தில்தான் 1923இல் தியாகரய நகர் என்ற புதிய நகரம் உருவாக்கப்பட்டது. நீதிக்கட்சியின் மூன்றாவது தலைவரான சி.நடேச முதலியாரின் பெயரில் நடேசன் பூங்கா அமைக்கப்பட்டிருக்கிறது. தி.நகரின் தெருக்கள், பூங்காக்கள் எல்லாம் நீதிக்கட்சி தலைவர்கள், பிரமுகர்களின் பெயர்கள் சூட்டப்பட்டிருக்கின்றன.

ஆனால், தி.நகர் பேருந்து நிலையத்திற்கும் ரங்கநாதன் தெருவுக்கும் இடையில் இருக்கிற நடேசன் தெருவுக்கும் நீதிக்கட்சிக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. அந்தத் தெரு நடேச ஐயர் தெரு என்று இருந்தது. அரசு, தெருவின் பெயர்ப்பலகைகளில் சாதியை ஒழித்தபோது ஐயர் மறைந்து 'நடேசன் தெரு' என ஆனது. நடேச ஐயர் கும்பகோனத்திற்கு அருகில் உள்ள கடலங்குடி என்ற ஊரைச் சேர்ந்த ஜோதிடர். கடலங்குடி பிரம்மஸ்ரீ நடேச சாஸ்திரி என்று அந்நாட்களில் அறியப்பட்டிருந்தார். பிழைப்புக்காகச் சென்னைக்கு வந்தவர்களில் ஒருவர். ஹரிகதா, இசை என்று நாட்டம் கொண்டிருந்த நடேச ஐயர் திருவல்லிக்கேணியில் தங்கியிருந்தார். அவரது சுக்ர திசையோ அவரை ஜோதிடத்தில் இறக்கிவிட்டது. பேரும் புகழும் பெற்று பிரபலமானார். அவர்தான் இந்தத் தெருவில் முதன்முதலில் மனை வாங்கி வீடு கட்டியவர். அதனால் அந்தத் தெருவுக்கு அவர் பெயர் நிலைத்துவிட்டது. சென்னை மாநகராட்சி ஒரு புதிய நகரை உருவாக்கும்போது, ஒரு தெருவில் யார் முதல் மனையை வாங்குகிறாரோ அவரது பெயரை அத்தெருவுக்கு இடும் முறை நிலவியிருக்கிறது. தி.நகர் சாம்பசிவன் தெருவில் முதல் மனை வாங்கியவர் சாம்பசிவன் பிள்ளை என்று அத்தெருவில் வசித்த தமிழறிஞர் திருச்சிற்றம்பலம் மு.அருணாச்சலம் அவர்களின் மகன் சொல்லியிருக்கிறார். (காண்க: மாயவரம் சில நினைவுகள் சில நிகழ்வுகள் சந்தியா நடராஜன்).

ஜோதிடத் துறையில் தன்னை நிலைநிறுத்திக் கொண்ட பிறகு நடேச ஐயர் 'கடலங்குடி பப்ளிகேஷன்' என்ற பதிப்பகத்தைத் தொடங்கி ஜோதிட நூல்களை வெளியிட்டு வந்தார். பிரம்ம சூத்ரம், ஸ்ரீமத் பாகவதம் போன்ற நூல்களும் இந்தப் பதிப்பகத்தால் வெளியிடப்பட்டன. கடலங்குடி பதிப்பகம் 1920இல் தொடங்கப்பட்டது. 104 ஆண்டுகளாகச் செயல்பட்டு வரும் 'கடலங்குடி'யை நடேச ஐயரின் பேரன் ஜெய்சங்கர் நிர்வகித்து வருகிறார். ஜெய்சங்கர் பொறுப்பேற்று 44 வருடங்கள் கடந்துவிட்டன. இவர் கடலங்குடி என்ற ஜோதிட மாத இதழையும் ஆரம்பித்தார். பதிப்பகம் வெற்றிபெற்றது போலப் பத்திரிகை வளர்ச்சி பெறாமல் நின்றுவிட்டது. ஜெய்சங்கரின் தந்தை அர்த்தநாரீஸ்வரன் குருநானக் கல்லூரியில் ஆங்கிலத்துறை தலைமைப் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். நடேச ஐயரின் பதிப்புப் பணியில் பேராசிரியர் அர்த்தநாரீஸ்வரனும் பங்களித்து வந்திருக்கிறார். ஜெய்சங்கரின் தாய் ஜோதிட கலாநிதி கே.என்.சரஸ்வதி கடலங்குடி பதிப்பகத்தின் அடுத்தகட்ட வளர்ச்சியை முன்னெடுத்தவர். தமிழில் நடேச ஐயர்

கொண்டுவந்த நூல்களை எல்லாம் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து அந்நாளைய ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரியை அழைத்துவந்து விழா நடத்தி கடலங்குடிக்கு ஒரு புதிய முகம் தந்தார்.

நடேச ஐயருக்கு ஐந்து பெண் பிள்ளைகள். சரஸ்வதி அம்மாள் அவரது கடைசி மகள். சரஸ்வதியின் மூத்த சகோதரியின் கணவர் உபந்யாச சக்கரவர்த்தி சேங்காளிபுரம் அனந்தராம தீட்சிதர். நாராயண பட்டரின் நாராயணீயத்தை தமிழ்நாட்டுக்குக் கொண்டுவந்த பெருமைக்குரியவர் அனந்தராம தீட்சிதர். தீட்சிதருக்கு சேலம் சொந்த ஊர். தனது இறுதிக்காலத்தில் சந்நியாசம் பெற்றுக்கொண்டார். சின்ன சேலத்தில் அவரது சமாதி உள்ளது. காஞ்சி மடாதிபதி ஜகத்குரு சந்திரசேகர சுவாமிகள் தொன்மை வாய்ந்த சிவலிங்கம் ஒன்றை அளித்து அங்கு பிரதிஷ்டை செய்திருக்கிறார். சமீபத்தில் நாராயணீயத்தை பிரவச்னம் செய்து வரும் ப்ரியா ஐயப்பன் தீட்சிதரின் அதிஷ்டானத்தில் நாராயணீய சம்பூர்ணம் செய்து வந்திருக்கிறார். பல்லாவரத்தில் வசித்துவரும் ப்ரியா ஐயப்பன் முதலில் மெடிக்கல் ட்ரான்ஸ்க்ரிப்ஷன் வேலை பார்த்து வந்தவர். பிரியா ஐயப்பனை நாராயணீய சொற்பொழிவுகள் செய்ய ஊக்கப்படுத்தியது வழக்கறிஞரான அவரது சகோதரர் சிவதாஸ். தனது தாய் நோயுற்றபோது ‘எல்லா இடங்களிலும் நாராயணீயம் பாராயணம் செய்வேன். அதுவே தாயை குணமாக்கிவிடும்‘ என்று கூறி அப்பணியைத் தொடங்கியிருக்கிறார். தாயும் குணமடைந்தார். பல்லாவரத்தில் வேல் பல்கலைக்கழகத்திற்கு அருகில் உள்ள தனது வீட்டின் கீழ் தளத்தில் பிரதி மாதம் முதல் சனிக்கிழமையன்று நாராயணீயம் வகுப்பு எடுத்து வருகிறார். ஓரிரு ஆண்டுகளுக்கு முன் கின்னஸ் சாதனைக்காக காலை முதல் மாலை வரை நாராயணீயம் முற்றோதல் நிகழ்வை வெற்றிகரமாக நடத்தியவர் ப்ரியா ஐயப்பன். தற்போது அமெரிக்கன் பல்கலைக் கழகம் ஒன்று பட்டம் அளித்து சிறப்புச் செய்திருப்பதாக அவரது தொண்டர் குழுவின் தீவிர செயற்பாட்டாளர் திருமதி.ஞானசுந்தரி சொன்னார். ப்ரியா அம்மையாரின் கணவர் ஐயப்பன் மறைமலை நகரில் செயல்படும் சிம்சன் குழும நிறுவனமான IPRLஇல் துணைத் தலைவராகப் பணிபுரிந்து வருகிறார். கொரோனா காலத்தில் நாராயணீயத்தை ஆன்லைன் மூலம் பயிற்றுவித்தார். நாராயணீயத்தைத் தொடர் நிகழ்வாக நடத்தி முடித்தவுடன் அடுத்த வகுப்பு தொடங்கும். இப்படியாக 12 வகுப்புகள் நடத்தியிருக்கிறார். தற்போது பாகவதத்தை நாராயணீயத்தோடு இணைத்துச் சொற்பொழிவாற்றி வருகிறார். தந்தை ராமதாஸின் நாராயணீயத்தைக் கேட்டு வளர்ந்ததுதான் ப்ரியா ஐயப்பனுக்கு ஆன்மீக அடித்தளம் அமைத்துத் தந்திருக்கிறது.

இன்று கடலங்குடி பதிப்பகத்தை நடத்திவரும் ஜெய்சங்கர் எம்பிஏ படித்தவர். அமெரிக்காவில் மியாமியில் ‘எல்லோ பேஜஸ்’ நிறுவனத்தில் ஐந்து ஆண்டு காலம் பணிபுரிந்தவர். மியாமி புயல் அமெரிக்காவைத் தாக்கியதன் பிறகு அமெரிக்க வாசம் போதுமென்று நடேசன் தெருவுக்குத் திரும்பிவிட்டார்.

கள்ளும் முள்ளும் புதருமாகக் கிடந்த நடேசன் தெருவில் நடேச சாஸ்திரி வீடு கட்டி, குடியேறியபோது அந்த வீட்டுக்கு கஸ்தூரிரெங்க விலாஸ் என்று பெயரிட்டிருக்கிறார். ஆங்கில ‘தி ஹிந்து’ நாளிதழைத் தொடங்கிய கஸ்தூரி ரங்கனின் நினைவாகத் தனது வீட்டுக்கு அப்படிப் பெயர் வைத்திருக்கிறார். தொழில் ரீதியான வளர்ச்சியில் கஸ்தூரிரங்கன், நடேச சாஸ்திரிக்கு உற்சாகமும் ஊக்கமும் உதவியும் செய்திருக்கிறார். ‘தி இந்து’ குடும்பத்தினரின் ஆஸ்தான ஜோதிடராகவே இருந்திருக்கிறார் சாஸ்திரியார்.

ரெங்கநாதன் தெருவின் LIFCO வரதராஜனும் அதே தெருவில் குடியிருந்த ராஜ்மோகன் பதிப்பகம் சாக்ரடீசும் ஜெய்சங்கரின் நெருங்கிய நண்பர்கள். ராஜ்மோகன் பதிப்பகத்தின் உரிமையாளர் சாக்ரடீஸ். இந்தப் பதிப்பகத்தை நிறுவியவர் அவரது அக்காவின் கணவர் நவராஜ் செல்லையா.

நவராஜ் செல்லையா திருச்சி சங்கிலியாண்டபுரத்தைச் சேர்ந்த உடற்கல்வி ஆசிரியர். காரைக்குடி அழகப்பா கல்லூரியில் அவர் பணியாற்றியபோது பேராசிரியர் குழந்தைநாதன் என்பவர் அளித்த ஊக்கத்தின் விளைவாக 1960இல் காரைக்குடி அழகு பதிப்பகம் மூலம் ‘விளையாட்டுகளின் வரலாறும் வழிமுறையும்’ என்ற நூலை எழுதி வெளியிட்டார். அதைத் தொடர்ந்து அவரது இன்னொரு நூலான ‘விளையாட்டு விதிமுறைகள்’ என்ற நூலை கல்லூரியின் முன்னாள் மாணவர் கழகம் வெளியிட்டது. செல்லையாவுக்கு சினிமா மீதும் மோகம் இருந்திருக்கிறது. அந்த ஆசையால் காரைக்குடியிலிருந்து சென்னை வந்து வித்யா மந்திர் உயர்நிலைப் பள்ளியில் உடற்கல்வி இயக்குநராகச் சேர்ந்தார். 1970இல் ராஜ்மோகன் பதிப்பகத்தைத் தொடங்கினார். உடற்கல்வி குறித்த நூல்களை வெளியிடுவதே அவரது நோக்கம். ‘நீங்களும் உடல் அழகு பெறலாம்‘, ‘நீங்களும் ஒலிம்பிக் வீரர் ஆகலாம்‘, ‘கைப்பந்தாட்டம்‘, ‘கால்பந்தாட்டம்‘ உள்ளிட்ட 180 நூல்களை எழுதி வெளியிட்டவர் நவராஜ் செல்லையா. 1971இல் தனது மைத்துனரான சாக்ரடீஸை திருச்சியிலிருந்து வரவழைத்துத் தன்னுடன் தங்கவைத்துக் கொண்டார். ராஜ்மோகன் பதிப்பக நூல்களைப் பள்ளிகளில் அறிமுகம் செய்து விற்பனை செய்யும் வேலையைச் சாக்ரடீஸ் செய்து வந்தார். 1977இல் ‘விளையாட்டுக் களஞ்சியம்‘ என்ற மாத இதழ் தொடங்கப்பட்டது. 2024 ஜூலை இதழுடன் நிதி நெருக்கடி காரணமாக இந்த இதழின் விளையாட்டு முடிவுக்கு வந்தது. 1980இல் மாம்பலம் லேக் வியூ ரோட்டில் ‘கிரேஸ் பிரின்டர்ஸ்’ என்று அச்சகம் ஒன்றை நிறுவினார். அந்த அச்சகம் 2000ஆம் ஆண்டுவரை இயக்கத்தில் இருந்தது. காலமாற்றத்தின்

அசுர வளர்ச்சியில் பழைய இயந்திரங்கள் காணாமல் போய்விடுகின்றன. நவராஜ் செல்லையா விளையாட்டை மையமாக வைத்து, 'ஓட்டப் பந்தயம்' என்று ஒரு திரைப்படமும் தயாரித்திருக்கிறார். விளையாட்டு நூல்களைப் பதிப்பிக்கவென்றே தன்னை அர்ப்பணித்துக்கொண்ட இந்த மனிதர் 2001இல் கர்த்தரிடம் அடைக்கலமானார். அதற்குப் பிறகு சாக்ரடீஸ் என்ற இனிய மனிதர் தனது துணைவியாருடன் இணைந்து செயல்பட்டு, ராஜ்மோகன் பதிப்பகத்தையும் தான் தொடங்கிய எஸ்.எஸ். பப்ளிகேஷன் நிறுவனத்தையும் தி.நகர் பேருந்து நிலையத்திற்கு அருகே போலீஸ் குவார்ட்டர்ஸ்ஸூக்கு எதிரே உள்ள தனது இல்லத்தில் இருந்தபடி நடத்தி வருகிறார். இந்த முகவரியில் இடம் வாங்கி, வீடுகட்டிக் குடியேறுவதற்கு முன் தி.நகர் ரெங்கநாதன் தெருவில் அலிமா கோல்டு கவரிங் கடைக்குப் பின்பகுதியில் வாடகைக்கு வசித்திருக்கிறார். அங்கிருந்து கொஞ்ச தூரத்தில்தான் அதே காலகட்டத்தில் அதே தெருவில் சுகந்தி மேன்ஷனில் நான் தங்கி இருந்திருக்கிறேன். ஆனால், அப்போது சாக்ரடீஸை எனக்குத் தெரியாது. நவராஜ் செல்லையாவின் நூல்களை, அரசு நாட்டுடைமையாக்கி சிறப்புச் செய்திருக்கிறது.

பிரிக்க முடியாதவை?

தியாகராய நகரும் தமிழ் பதிப்புப் பணியும்.

தொடரும்

*mail to:* **sandhyapathippagam@gmail.com**







# ஆத்ரேயனும் ஜானகிராமனும்
# அவர் சம்பாஷணையையே சங்கீதமாக்கிப்புடுவார்

சைவத் தமிழறிஞர் சேக்கிழார் அடிப்பொடி டி.என். ராமச்சந்திரன் பற்றிய ஆவணப்படத்தை எடுத்துக்கொண்டிருந்த நாட்களில் அது தொடர்பாக சுவாமிநாத ஆத்ரேயனை ரெண்டு மூன்று நாட்கள் சந்தித்துப் பேச வாய்ப்பு நேர்ந்தது. அந்த ஆவணப்படத்தில் அவரும் பேசியிருக்கிறார். நேரம் கிடைத்தபோது நான் தி. ஜானகிராமனைப் பற்றியும் அவரது சங்கீத ஈடுபாடு பற்றியும் அவரிடம் கேட்டபடி இருந்தேன்.

● **ரவிசுப்பிரமணியன்**

"சங்கீத மேதை உமையாள்புரம் சுவாமிநாதய்யர்ன்னு அவர்கிட்டக்க ரெண்டு பேரும் சிட்ஷை சொல்லிக்கிட்டோம். அவர் பெரிய மகாத்மியம் உள்ள வழில வந்தவர். ஜானகிராமனோட ஸங்கீத ஈடுபாடு பத்திக் கேட்டேள்ன்னாக்கா, அது அவ்ளோ ஆச்சர்யம். அத வந்து அவருடைய பக்தின்னு சொல்றதா உபாசனைன்னு சொல்றதா... நல்ல ஸங்கீதத்த அப்படி ஒருவித உணர்ச்சிமயமா வாங்கிப்பர். அடடா அடடான்னுட்டு அப்ட்டியே அதுல ஆழ்ந்து பொயிடுவர். சேர்ந்து படிச்சது மட்டுமில்ல, பல தடவை சேர்ந்து போய்க் கேட்ருக்கோம். அதே சமயம் அபஸ்வரம், கொனஷ்ட்டை, லய பிசகு கேட்டுட்டா அந்த சாது மனசுல அப்படி ஒரு கோபம் மண்டும். அத நீங்க அவர் எழுத்துலயே வாசிச்சிருப்பேளே. நல்ல சங்கீதம் வழியா முடிவற்ற ஒரு இன்பப் பெரு நிலையை அவர் வேண்டிண்டேருந்தார்ன்னு சொல்லலாம். அதக்கூட ஒரு நாயனக்காரர் கதைல சொல்ருக்கார். நல்ல வாசிப்பக் கேட்டு ஒரு வெளிநாட்டுக்காரன் நிறுத்தாதேங்கோ வாசிங்கோ வாசிங்கோன்னு கேட்டு அந்த அனுபவத்தச் சொல்வான். கல்கிலயோ, மித்ரன்லயோ வந்தது அது. அத கொணந்து 'சாந்தமு லேகா'வுல புனைச்சிருப்பர் பாருங்கோ. நீங்களும் மியூசிக் படிச்சேள்ன்னு சொன்னேள் இல்ல."

"ஆமா சார். உங்கள மாதிரி இவ்ளோ சங்கீதம் தெரிஞ்ச மனுஷன் சுபாவத்துலயும் இசையா இருப்பாரோ?"

"ஆமா. அதான், நீங்கதான் அவரைப் பாத்ததே இல்லன்னுட்டேளே. அவருடைய ஹிருதயமிருக்கே அது அப்படி ஒரு கோமளம். ஒண்ணும் படாடோபமால்லாம் பேச மாட்டார்; வார்த்தய எண்ணி எண்ணிப் பேசுவார்; பிடிச்ச விஷயம் வர வரைல சரளம் வராது. வந்தாச்சுன்னா, அப்பறம் போட்மெயில்தான். எப்பவும் ஒரு சிரிச்ச மொஹம். கொழந்த மாதிரி சிரிப்பில வர ஒரு காருண்யம். இதெல்லாம் அவர் குண விசேஷம். அப்பறம் மனுஷன மனுஷனா ஆக்கறதே இலக்கியம் தானே. அவரும் சிருஷ்டிகர்த்தா. இன்னும் உசரமால்ல இருக்கணும். எவ்ளோ கோடிகள் சம்பாறிச்சாலும் கீழ விழுந்த பொறத்தானை கைதூக்கி விடலைன்னா அவன் மனுஷனா? நீ ஹாஸ்பிட்டல் கூட்டிண்டு போக வேணாமய்யா. கைதூக்கி விடலாமே. ஆசுவாசப்படுத்தி ஜலம் தரலாமே. சித்த விசிறலாமே. அவர் அவரோட மித்த பிரண்ட்ஸ்க்கு பண்ருக்க விஷயங்கள் இருக்கே. அடே, மறந்துட்டேன் பாரும். நீர் தான் எம்.வி.வி., கரிச்சான் குஞ்சு கூடவே இருந்திருக்கீரேய்யா... அவாளுக்கு பண்ணதெல்லாம் தெரியாதா உமக்கு. அது மாரி எவ்ளோவோ. அப்படி எதுனா முடிஞ்ச உதவிய கூடவேலை பண்றவாள்லேர்ந்து ஆரம்பிச்சு யாருக்கும் எதோ பண்ணிண்டே இருப்பார். வெளில ஆனா, செய்றதச் சொல்லமாட்டர். அதையும் சரி. அவர் முடையா இருக்கச்சயும் சரி. மத்தவாளுக்கு ஏதாவது செய்ஞ்சிண்டே இருக்க நல்உயர் பண்பு அவருக்கு ஜெனட்டிக்லயே வந்துடுத்து. எல்லாத்துக்கும் மேலா ஒரு ஆழ்ந்த சிந்தனை எப்பவும்."





"உங்ககிட்ட எப்படிப் பேசுவார்? நீங்க எப்படிப் பேசிப்பிங்க?"

"நாங்க ஃபிரண்ட்ஸ்தானே. சகஜமா பேசிப்போம். அவர் உலகம் விசாலம். ஆசிரியர், அப்பறம் மீடியா, ஏக விஷயங்கள் அறிஞ்சவர். கேட்டுண்டுட்டே இருக்கும்படியா சொல்லவும் சொல்வார். நான் ஜானகிராமன் வரவுக்காகவே காத்துண்ருப்பேன். அது ஒரு காலம். அவர் நன்னாப் பாடுவார் தெரியுமோ. பொதுவா எங்க இலக்கிய சம்பாஷணைலகூட சங்கீத வொக்காபிலரி அங்கங்க தானா வந்துடும். சங்கீதம், இலக்கியம் ரெண்டும் பொதுவில்லையா எங்களுக்கு."

"என்ன பாடுவார்?"

"என்ன... ஆரம்ப காலங்கள்ல சொல்லிக்குடுத்த பாடாந்திரத்தப் எங்கயாவது மரம் மட்டையா இருக்க இடமா உக்காண்டு வாய்விட்டு பாடிப்போம். ஆனா, நொட்டேஷனை வச்சிப் பாடினா கூட, ஒரு மாஸ்டர் வழியா மைக்ரோ நுவான்ஸஸ் தெரிஞ்சிண்டாதான் அது பூரணமாகும். அவருக்கு அபாரமான ஸ்ருதி ஞானம். ஸ்ருதின்னாக்க அவ்ளோ சுத்தமா ஹண்ரட் பர்சன்ட் இருக்கணும் அவருக்கு. அது பத்தியும் நிறைய எழுதிருக்காரே. அவ அப்பா பிரவச்சனக்காரர் வேற இல்லியா. அதனால சங்கீதம் பால்யத்துலேர்ந்தே அவர் ஆத்துலேர்ந்தே அவரை சுத்திண்ட்ருந்திருக்கு. எதுனா சொல்லி வச்சா உடனே கப்புன்னு பிடிச்சுப்பர். ராவெல்லாம் அதயே பாடிப் பாடிப் பாப்பார். பாடப் பாடத்தானே பதியும். இதல்லாம் கலந்து நாங்க எங்க உள்ளங்களப் பரிமாறிக்கறச்சே அந்த அன்பு நெகிழ்ந்து ஒரு பாங்கு கிடைச்சு ஒரு ஸ்டேஜ்ல மௌனமாயிடுவோம். பாவங்கள் உறைஞ்சு வெறுமன சுஸ்ஸருதி மட்டும்தான் கேக்கும். அப்ப பாத்தேள்ன்னாக்கா அங்க வார்த்தைகளுக்கு இடமில்லை. அது ஒரு அனுபூதி. என்ன சொல்றேன்னு புரியறதா உங்களுக்கு?"

"புரியுது சார். வேற லெவல்ல பழகிருக்கீங்க. அவர் சங்கீதம் பத்தி வேற எதாவது...?"

"அதான் மின்னயே சொன்னனே, அவர் வந்து சம்பாஷணையையே சங்கீதமாக்கிப்புடுவார்... எம்ட்டன். லயத்தையே சங்கீதமாக மாத்தி சங்கீதமா, லயமா, பாவமா வார்த்தையான்னு தெரியாம ஒண்ணுக்கொண்ணு மலைத்தேனும் பசும்பாலும் குடிக்கும் சூட்டில் கலந்தாற் போல செய்ஞ்சு பதமா தர்ற வித்தை அவர்கிட்ட இயல்பா குடிகொண்ட்ருந்தது. அது அவர் பேச்சுல எழுத்துல எல்லாத்துலயும் வியாபிச்சு இருக்கும். நம்ம திருவையாத்து ஐயாரப்பனைச் சொல்றாளே குறவர்,

விரும்பும் வண்ணமும்
வேதத்தின் வண்ணமும்
கரும்பின் இன்மொழிக்
காரிகை வண்ணமும்
விரும்புவார் வினை தீர்த்திடும் வண்ணமும்
அரும்பின் வண்ணமும்
ஆவர் ஐயாறரே.

அவர் யங் ஏஜ்லேர்ந்தே நான் பழக ஆரம்பிச்சாலும் இந்தப் பாட்டு ஞாபகம் வந்துடும் எனக்கு. அது ஏன்னு தெரியல. அப்படி ஒரு ஆத்மா. இப்ப அந்த மனித மாண்பு பொயிடுத்தே சார். சப்ஜாடா எல்லாம் யந்த்திர மயம்."

"நீங்களும் சங்கீதம் பத்தி நிறைய எழுதிருக்கீங்க. தியாகராஜ சுவாமிகள் பத்தி சிறுகதைகள் எழுதிருக்கீங்க. ராமதாசர், ஹனுமான் பத்தி... அப்பறம் அவ்ளோ கீர்த்தனைகள மொழிபெயர்த்துருக்கீங்களே?"

"எழுதிருக்கேன். ஆன்மீகமா இசையா கொஞ்சம் ஜாஸ்தியாவே எழுதிருக்கேன். யாரும் அவ்ளோ போகா பாதைகள் நான் போனது. சிலதுக்கு காஞ்சி பெரிவா வழி காட்டினா. ஜானகிராமனுக்கும் எனக்கும் நினைவாற்றலுக்குக் குறைச்சல் இல்ல. மேம்படியா மேம்புல் மேயறது பிடிக்காது. கலை ரசனையும் சமானம்தான். இலக்கிய ஆசையும் அப்படி ஒண்ணாத்தான். ஆனா, அவரளவு போய்ச் சேர வேண்ட்ருந்தது நேக்கு சித்திக்கலையோ என்னவோ, இல்ல என் காலம் போன பிறகு புரிஞ்சுனுடுவாளோ தெரியல. யாரும் என் புஸ்தகம் வேணும்ன்னு கேட்டு ஒரு கார்டு போட்டாக்கூட அவாளுக்கு நானே அனுப்பிண்ருந்தேன், வானதிலேர்ந்து வாங்கி வாங்கி. உங்களுக்குக் கூட லலிதா ஸ்டோர்ஸ் விலாசத்துலேர்ந்து அனுப்பிச்சிருக்கேன்ல்லய்யா. மாணிக்க வீணையோ தியாகராஜ அனுபவங்களோ எதோ ஒண்ணு. மங்கிண்டே வரது எல்லாம்."

*mail to:* **ravisubramaniyan@gmail.com**

# விளிம்புநிலையிலிருந்து எழுந்து வரும் திரைமொழி

‘விளிம்பு நிலை மக்களின் வாழ்வியல் பிரச்சினைகளை பேசு பொருளாக மாற்றும் தமிழ் சினிமா’ என்ற தலைப்பில் சமீபத்தில், ஒரு கருத்தரங்கம் நடைபெற்றது. ‘ஜமா’, ‘தங்கலான்’, ‘வாழை’, ‘லப்பர் பந்து’, ‘கொட்டுக்காளி,’ ‘நந்தன்’, ‘சார்’, ‘நீல நிற சூரியன்’, ‘ஜில்லு’ ஆகிய திரைப்படங்களை முன்வைத்து கருத்துரையாளர்கள் தங்களுடைய சிந்தனைகளைப் பகிர்ந்துகொண்டார்கள். அதில் நான் கலந்துகொண்டது ஒரு வித்தியாசமான கண்ணோட்டத்தையும் பார்வையையும் என்னுள் விதைத்தது.

● அ. இருதயராஜ்

விளிம்பு நிலை மக்கள் என்றால், சமூக அரசியல், பொருளாதார, பண்பாட்டுத் தளங்களில் வாய்ப்புகளும் வசதிகளும் காலங்காலமாக மறுக்கப்பட்டதால், தற்சார்பு நிலையை இழந்து, பிறரை சார்ந்து இருக்கின்ற நிலைக்கு தள்ளப்பட்டுள்ள, சமூகத்தின் கடைக்கோடியில் (விளிம்பில்) வாழுகின்ற மக்களைக் குறித்து நிற்கின்றது. இவர்களில் தலித்துகள், பழங்குடியினர், கைம்பெண்கள், கைவிடப்பட்ட பெண்கள், ஆதரவற்ற குழைந்தைகள், மாற்றுத் திறனாளிகள், திருநங்கைகள், ஏதிலியர், புலம்பெயர்ந்தோர் அடங்குவர்.



தமிழ் சினிமா 1990களில் பெரும்பாலும் ஆதிக்க சமூகத்தின் வாழ்வியலையும் மதிப்பீடுகளையும் நெறிமுறைகளையும் உயர்ந்ததாகக் கருதி, அழகியல் தன்மையோடு அதை பொதுமக்களின் நுகர்வுக்காக வெளியிட்டது. ‘நாட்டாமை’, ‘சின்ன கவுண்டர்’, ‘தேவர் மகன்’, ‘பெரிய கவுண்டர் பொண்ணு’, ‘மறவன்’ போன்ற படங்களை பொது சினிமா பார்வையாளர்களும் பார்த்து இரசித்தார்கள். எல்லோரும் கைதட்டி வரவேற்பதும் கொண்டாடுவதுமாக இருந்தனர். இதைத்தான் இத்தாலிய மார்க்சிய சிந்தனையாளர் அந்தோனியோ கிராம்சி, “சினிமா என்பது பண்பாட்டு மேலாதிக்கத்தை தூக்கிப் பிடிக்கும் ஒரு சக்தி வாய்ந்த கருவியாக செயல்படுகின்றது”, என்றார்.

பொருளாதாரத் தளத்தில் பொருட்களையும் உபகரணங்களையும் உற்பத்தி செய்கின்ற அதிகாரத்தையும் பலத்தையும் தங்கள் கைகளில் வைத்திருக்கின்ற அதே ஆதிக்க வர்க்கம் தான், பண்பாட்டுத்தளத்தில் ஆதிக்கக் கருத்துக்களையும் அடிமைத்தனச் சித்தாந்தங்களையும் உருவாக்குகின்ற அதிகாரத்தையும் பலத்தையும் தங்களின் கைகளிலே வைத்திருக்கிறது. எனவே, அவர்கள் ஏழை எளிய மக்களை அடிமைப்படுத்துகின்ற, அடக்குமுறைக்குள் வைத்திருக்கின்ற பல்வேறு அடிமைத்தன மதிப்பீடுகளையும் கூறுகளையும் எளிதாக திரைப்படங்கள் வழியே கடத்த முடிகின்றது. அத்தகைய மேலாதிக்க கருத்தியலும் மதிப்பீடுகளும் தான் சரியானது என்று கூட விளிம்பு நிலை மக்களை நம்ப வைக்க முடிகிறது.

அந்த காலத்தில் சினிமா துறையில் இருந்தவர்கள் பெரும்பாலும் மேட்டுக்குடி சமூகத்திலிருந்து வந்தவர்கள். விளிம்பு நிலை மக்களின் பிரச்சினைகளும் ஆதிக்க சாதி படைப்பாளிகளின் கண்ணோட்டத்தின் வழியாகவே சொல்லப்பட்டன. அவர்கள் விளிம்பு நிலை மக்களுடைய வாழ்வியலையும் மதிப்பீடுகளையும் சரியாக உள்வாங்காமல், அவர்களின் உணர்வுகளையும் தேவைகளையும் தெளிவாக புரிந்துகொள்ளாமல், திரைக்கதைகளை எழுதினார்கள். ஆனால், 90களுக்குப் பிறகு, பாதிக்கப்பட்ட விளிம்பு நிலை சமூகத்தில் இருந்து படித்து முன்னேறிய முதல் தலைமுறையினர், சினிமா துறைக்குள்ளும் இளம் இயக்குனர்களாக காலடி எடுத்து வைத்தனர். அவர்கள் விளிம்பு நிலை மக்களின் வாழ்வியல் பிரச்சனைகளையும் வலிகளையும் வடுக்களையும் போராட்டங்களையும் உள்ளிருந்தே பார்த்தார்கள். அந்த உள்ளிருக்கும் பார்வைக்குள்



ஏராளமான உயிர் துடிப்பும் உண்மையும் ஏக்கப் பெருமூச்சும் இருந்தது. எனவே தான் அவர்கள் எடுத்த படங்கள் எதார்த்தத்தோடு ஒட்டி இருந்தது. பார்வையாளர்களை படத்தோடு எளிதில் ஒன்றினைய வைத்தது.

விளிம்பு நிலை மக்களை பற்றிய இலக்கியம், இலக்கியம் சார்ந்த விவாதங்கள், உரையாடல்கள் நிறையவே தமிழ் சூழலில் நிகழ்ந்துள்ளன. விளிம்பு நிலை சமூகத்தில் இருந்து திரைத்துறைக்கு வந்த இளம் இயக்குனர்கள் அத்தகைய இலக்கியங்களை ஆழமாக வாசித்துள்ளதும், இந்த மக்களின் வாழ்வியல் மதிப்பீடுகள், பிரச்சினைகள், எதிர் குறியீடுகள் எல்லாம் ஆழமான, அழுத்தமான காட்சி மொழியோடு வெள்ளித்திரையில் பட்டவர்த்தனமாகச் சித்தரிக்க உதவியுள்ளன.

குறிப்பாக தலித் மற்றும் பழங்குடியின மக்கள் மீது நிகழ்த்தப்பட்ட வன்முறைகள், மனித உரிமை மீறல்கள், நிலம் சார்ந்த பிரச்சினைகள், சமூக நீதி குறித்த உரையாடல்கள், இவற்றை மையப்படுத்திய திரைப்படங்கள் அதிகமாக வெளிவந்தன. இவை ஒவ்வொன்றும் அந்தந்த வட்டாரத்து வழக்குகளை அல்லது பிரச்சினைகளை முன்னிறுத்தி வெளிவந்தன என்பது குறிப்பிடத்தக்கது. குறிப்பாக தலித் மக்கள் மீது சுமத்தப்படுகின்ற கொடூரமான தீண்டாமை நிகழ்வுகள், மாண்பைச் சிதைக்கும் வசவுகள், ஆதிக்கத்தின் அடக்குமுறை ஆகியவை நேர்த்தியாக காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. மேலும், நில உரிமை, சுய மரியாதைக்கான உரிமைப் போராட்டம், அரசாங்க நிர்வாகத்தில் தலித் மக்களுக்கு எதிரான பாகுபாடுகள், ஏழை எளிய மக்களுக்கு வந்து சேர வேண்டிய அரசின் திட்டங்கள் எப்படி எல்லாம் சீர்குலைந்து நிற்கின்றன என்பதை பற்றி எல்லாம் இந்த படங்கள் வெளிப்படுத்தின.

இன்றைக்கும் ஒரு தலித் பஞ்சாயத்து தலைவர், எப்படியெல்லாம், தேர்ந்தெடுக்கப்படும் முறையில் அவமானப்படுத்தப்படுகிறார் என்றும், அப்படியே தேர்ந்தெடுக்கப்பட்டாலும் எத்தகைய சவால்களையும் இழிவையும் அவமானத்தையும் சகித்துக் கொண்டிருக்கின்றார் என்பதையும் ‘நந்தன்’ காடசிப்படுத்துகிறது. ஆதிக்க சாதி என்பது ஏதோ



தீண்டாமையைக் கடைபிடிப்பதில் வெளிப்படுவதில் மட்டுமல்ல. மாறாக, அது பொருளாதாரக் கட்டமைப்போடும் அதிகார கட்டமைப்போடும் ஆணாதிக்கத்தோடும் எப்படி பிண்ணிப் பிணைந்து செயல்படுகின்றது என்பதையும் விவாதத்திற்கு உள்ளாக்கியது. தலித் மக்களுக்கு எதிராக நடக்கின்ற கொடுமைகள், பல இடங்களில், பல சூழல்களில் அரசு இயந்திரத்தின் அனுமதியோடுதான் நடக்கின்றது என்பதை நினைக்கின்ற பொழுது இன்னும் வேதனையாக இருக்கிறது.

சரி, இந்த திரைப்படங்கள் தமிழ் மக்கள் மத்தியில் எத்தகைய தாக்கத்தை ஏற்படுத்துகிறது?

மனிதர்கள் ஒருவரை ஒருவர் சமமாக மதிப்பதும் சமத்துவத்தை பேணுவதும் ஒரு படைப்பின் முக்கியமான நோக்கமாக இருக்கின்றது. எல்லா விதமான மேலாதிக்கத்திற்கும் சாதிய மனதரும கோட்பாடு தமிழ் சமூகத்தில் புரையோடிப் போய் கிடக்கின்றது என்பதை சினிமா காட்சிகளும் வசனங்களும் நமக்கு கோடிட்டு காட்டுகின்றன. இதை கேள்விக்கு உட்படுத்துகின்ற தமிழ் சினிமாவின் போக்கு பொது மக்கள் மத்தியில் பேசுபொருளாக மாற்றியுள்ளன. பார்வையாளர்கள் மத்தியில் இது ஆரோக்கியமான விவாதங்களையும் கேள்விகளையும் எழுப்புகின்றது.

இது, முற்போக்கு சிந்தனைகளை சமூகத்தின் மைய நீரோட்டத்தில் இருக்கின்ற மக்களிடையே பரப்புகின்றது. இந்த நவீன யுகத்தில் சாதிய பாகுபாட்டை ஒழித்து, சமத்துவம், சகோதரத்துவம், சமூக நீதியை நிலைநாட்டுகின்ற பயணத்திலே இது ஒரு முக்கியமான புள்ளி என்று கருதலாம். எனவேதான் விளிம்புநிலை மக்களை ஆதரித்து வருகின்ற திரைப்படங்களுக்கு மக்களுடைய அதிகமான வரவேற்பு இருக்கின்றது. குறைந்த செலவில் எடுக்கின்ற திரைப்படங்கள் கூட, எளிய மக்களின் வாழ்வியலை யதார்த்தமான சூழ்நிலையில் எடுத்துக்காட்டியதால், அதிகமான வசூலையும் பெற்றிருக்கின்றன. இதன் மூலம் வெறும் ஜாதிய மேலாதிக்கத்தை மட்டுமே வைத்து திரைப்படம் எடுக்க முடியாது என்கின்ற நிலை உருவாகியுள்ளது.

இந்தப் பின்ன்ணியில், இன்னும் தமிழ் சினிமா செய்ய வேண்டிய சீறிய பணி இருக்கின்றது. அந்தந்த வட்டாரத்தில் அநீதியை எதிர்த்துப் போராடிய, விளிம்பு நிலை மக்களின் வாழ்விலே முக்கிய பங்காற்றி அகால மரணம் அடைந்த முன்னோர்களையும் அவர்களின் சவால் மிக்க கதைகளையும் திரைப்படமாக மாற்றினால் அது இக்கால இளைஞர் மத்தியில் ஒரு வீரத்தையும் நம்பிக்கையும் விதைக்கும் என்பதில் ஐயமில்லை.

கீழிருந்து எழுந்து வருகின்ற அடித்தட்டு மக்களிடமிருந்தும் கதைகளையும் மதிப்பீடுகளையும் உலகிற்கு எடுத்து சொல்ல வேண்டிய தேவை இருக்கின்றது. அந்த மக்களிடம் ஏராளமான கதைகளும் வலி நிறைந்த கதையாடல்களும் இருக்கின்றன என்பதை பொது சமூகம் புரிந்துகொள்ள வேண்டும். அதற்கான திறப்புகளை தமிழ் சினிமா இனி வருகின்ற காலங்களில் அதிகமாக உருவாக்க வேண்டும். அது புதிய சமூகத்தையும் புதிய பார்வையையும் புதிய கண்ணோட்டத்தையும் இளைய சமூத்தினரிடம் உருவாக்குவதற்கு ஒரு பாலமாக இருக்கும்.

*mail to:* **iruraj2020@gmail.com**

# மருட்சி

சூரியன் கசங்கல் மசங்கலாக மேலே எழத் தொடங்கியிருந்தான். நான்கைந்து தெருநாய்கள் மண்சாலை சந்திப்பில் நின்று மேற்கைப் பார்த்துக் குரைத்துக் கொண்டிருந்தன. நடுவுளான் அப்பாவு தென்னை மரத்திலிருந்த இரண்டு காகங்கள், கழுத்தைச் சாய்த்துச் சாய்த்துத் தெருவையும் நாய்களையும் பார்த்துக் கொண்டிருந்தன.

● **கவிப்பித்தன்**

ஓவியம்: **நஹீம் ருஸ்தும்**

**சு**ப்பாராவின் வீட்டு வாசலில் ஒரு சிறிய கும்பல் சேர்ந்திருந்தது. அவர்களின் கண்களில் கட்டுக்கடங்காத ஆர்வம் தெறித்துக் கொண்டிருந்தது. நம்பிக்கை வற்றிப்போன கண்களுடன் வைத்தியரின் எதிரில் நின்றிருந்த சுப்பாராவ் கடமைக்கு நிற்பவர் போல வெறுமனே நின்றிருந்தார்.

தனது நீளமான வெள்ளை நிறத் தாடியை வருடியவாறு மோகனசுந்தரத்தின் முழு உடலையும் பார்த்துக் கொண்டிருந்தார் வைத்தியர். கட்டிலில் படுக்க வைக்கப்பட்டிருந்த மோகனசுந்தரத்தின் முகத்தையும் நொடி நேரம் கூட நிற்காமல் துறுதுறுவென அலையும் அவன் கண்களையும் நெடுநேரம் உற்றுப் பார்த்தார். எலும்புக் கூடாய் மாறியிருந்த அவனது மார்பில் சீரற்ற மூச்சு ஏறி இறங்கிக் கொண்டிருந்தது.



“எத்தினியோ வைத்தியருங்க... டாக்டருங்கள பாத்துப் பாத்து சலிச்சிப் பூட்ச்சி... இவுரு மட்டும் இன்னாத்தப் பண்ணிடப் போறாரு...” என தன் மனைவி கோமளவல்லியிடம் முனகினார் சுப்பாராவ்.

தலைக்குக் குளித்து, நெற்றியில் குங்குமப் பொட்டு பளிச்சிட, பயபக்தியோடு நின்றிருந்த கோமளவல்லி இயலாமையுடன் கணவனைப் பார்த்து முனகினாள்.

“கம்னு இரு... வைத்தியரு காதுல வியப்போவுது... எவ்ளோ பெரிய வைத்தியருனு சொல்றாங்க... நம்பூட்ட தேடி வந்து கீறதே நம்ப புண்ணிமோ... கிஸ்டரு புண்ணிமோ... நல்லாய்டும்...”

“ம்கும்... பாக்கலாம்...”

தெருவில் நின்றிருந்த கும்பல் வாசலேறி உள்ளே வர துடித்தது. கோமளவல்லியின் அண்ணன் சுந்தரவதனம் தெருவாசலின் குறுக்கே கதவு போல நின்றிருந்தார். அவரை மீறி உள்ளே யாராலும் வரமுடியவில்லை. பள்ளமான கால்வாயில் வேகமாகத் தண்ணீர் பாய்வதைப்போல சலசலவென பேச்சுச் சத்தம்.

வைத்தியர் திரும்பி தெருவைப் பார்த்தார். அவர் முகத்தில் ஒரு சிடுசிடுப்பு. பார்வையில் கோபம்.

“கம்னு இருங்கபா... இங்க இன்னா கூத்தா கட்றாங்க... மாமா நீ அப்டிகா போய் கீய குந்து... ஜனங்கல்லாம் அப்படி புளி மரத்துக் கீய போய் குந்துங்க...” எனக் கத்தினார் சுந்தரவதனம். அவரது அதட்டலுக்கு ஒரு நிமிடம் அடங்கியது சலசலப்பு.

மரக்கட்டிலில் அலங்கோலமாயப் படுத்திருந்த மோகனசுந்தரத்தின் அழுக்கேறிய கால்களில், ஒரு பூட்டாங்கயிறு கட்டப்பட்டு, கட்டிலோடு பிணைத்திருந்தனர். இரண்டு கைகளிலும் அதே போல தனித்தனியாக கயிறுகள். அந்தக் கட்டுகளையும் மீறி திமிறுவதும் புரள்வதுமாக ஒரே ஆர்பாட்டம்.

“இன்னிக்கி பரவால்ல... நேத்து... அதுக்கு மின்னால... அமாவாச அரமுட்டல்ல... ஒரே அதகளமா பூட்ச்சி... புடிக்கவே முடில....” என்றார் சுந்தரவதனம்.

“எத்தினி நாளிக்கிதாம்பா இப்டியே ரோதன படுவீங்க... இந்த தாடி சாமியாரு பெரிய வைத்திரு... எதுனா நல்லது பண்ணுவாரு...” என்றான் தருக்கு முனிசாமி.

வைத்தியர் மீண்டும் திரும்பி முறைத்தார். சலசப்பு அடங்கியது. மீண்டும் நோயாளியின் முகத்தை உற்றுப் பார்த்தார்.

கண்கள் இரண்டும் நத்தையின் கூட்டைப் போன்ற பள்ளத்தில் ஒடுங்கி இருந்தாலும் ஏதோ ஒரு வெளிச்சம்

அந்தப் பார்வையில் சிதறிக்கொண்டே இருந்தது. நிலையில்லாத பார்வை. ஓய்வில்லாமல் கூரையையும் சுவற்றையும் வாசலையும் அந்தரத்தையும் மிரண்டு மிரண்டு பார்க்கிற பார்வை.

நீளமான டவுசருக்கு மேலாக மாட்டியிருந்த கிழிசல் சட்டையில் ஒரு வண்டி அழுக்கிருக்கும். பட்டன்கள் ஏறுமாறாக போடப்பட்டிருந்தன. தலைமுடி பரட்டையாகக் கிடந்தது. முகத்தில் கரடுமுரடான தாடி. சுற்றிலும் முடை நாற்றம். அந்த உடலில் தண்ணீர் பட்டு மாதக்கணக்காகி இருக்கும். எப்போதாவது தண்ணீர் ஊற்றுவதற்குள் ஊரே கூடிவிடும். சுப்பாராவும் கோமளவல்லியும் பட்டுத் தேறுவார்கள்.

ஆனால், நான்கு வருடங்களுக்கு முன்பு வரை அப்படியா இருந்தான் இந்த மோகனசுந்தரம்...? அதை எப்போது நினைத்தாலும் நடு நெஞ்சில் சுரீரென குத்தும் சுப்பாராவுக்கு.

**தி**னமும் குளித்து, முகச்சவரம் செய்து, சின்னக் கைப்பெட்டியோடு டிப்டாப்பாக மோகனசுந்தரம் அலுவலகத்திற்குக் கிளம்புகிறபோது ஊரே நின்று வேடிக்கைப் பார்க்கும். அப்படி ஒரு சுத்தம், அப்படி ஒரு மிடுக்கு. அலையலையான தலைமுடி. இடது புற வகிடு. சட்டையை இன்செய்து தெருவில் அவன் நடந்து போய் டவுன் பஸ்ஸில் ஏறினால் பேருந்தே மணக்கும். குளிக்காமல், முகம் கூட கழுவாமல் சந்தைக்குப் போகிறவர்களும் பயிருக்கு உரம் வாங்கப் போகிறவர்களும் ஒதுங்கி வழிவிடுவார்கள். எழுந்து இருக்கை கூட விடுவார்கள்.

அப்படி இருந்தவன். இப்போது அரைப் பிணமாய்... உயிர் இருந்தும் மரக்கட்டையைப் போல... சில நேரம் தண்ணீரின் சுழலில் சிக்கி மூச்சுக்காக அல்லாடுகிற சருகைப் போல.

அவர்களின் பூர்வீக ஊரான கல்பாக்கதிலிருந்து இந்த ஊருக்கு அவர்கள் குடும்பத்தோடு வந்து சேர்ந்த போது அவனுக்கு இருபத்தி மூன்று வயது. டிப்ளமோ படித்து முடித்தவுடனே பொதுப்பணித்துறையில் வேலை கிடைத்துவிட்டது. ஆற்காட்டில் அலுவலகம். கல்பாக்கத்திலிருந்து ஆற்காடு வந்து போக முடியாது என்பதால், வாலாஜாவுக்குப் பக்கத்தில் இருக்கும் தன் அம்மாவின் சொந்த ஊரான இந்த ஊருக்கு அவர்கள் வந்து சேர்ந்தபோது, இந்த ஊரே வாயைப் பிளந்துகொண்டு பார்த்தது.

விவசாயமும் மாடு வளர்ப்பும் மட்டுமே தொழிலாக இருந்த இந்த ஊர் சம்சாரிகளுக்கு மோகனசுந்தரத்தின் நிறமும் உயரமும் உடல் திடமும் பேச்சும் அப்படி ஒரு பிரமிப்பைத் தந்தன.

சுப்பாராவுக்குத் தன் சொந்த ஊரில் கொஞ்சம் விவசாய நிலமும் வீட்டிலேயே ஒரு பெட்டிக் கடையும் இருந்தது. மகனுக்கு இங்கே அரசு வேலை கிடைத்ததும் எல்லாவற்றையும் தொலைத்துவிட்டுதான் இந்த ஊருக்கு வந்தார்.

கோமளவல்லியின் அண்ணன் சுந்தரவதனத்திற்கும் விவசாயம் தான். ஓட்டு வீடுதான். அவருக்கு இரண்டு பிள்ளைகள். பெண் குழந்தை இல்லை. பையன்களுக்குத் திருமணமாகி ஆளக்கொரு அறையில் இருந்ததால் சுப்பாராவ் குடும்பத்துக்காக தனியாக ஒரு ஓட்டு வீட்டை வாடகைக்குப் பிடித்துக் கொடுத்தார்.

இந்த ஊரிலிருந்து முக்கால் மணி நேரப் பணம்தான் ஆற்காடு. மோகனசுந்தரம் காலையில் எழுந்ததுமே அரை மணி நேரம் உடற்பயிற்சி செய்வான். முகச்சவரம் செய்துகொண்டு, பிரஸ்ஸால் பல் தேய்த்தபடி நடந்து போய் கிணற்றில் குதித்துத் தலைக்குக் குளித்துவிட்டுத் திரும்பி வந்தால் காலைப் பலகாரம் தயாராக இருக்கும். சாப்பிட்டுவிட்டு, சலவை செய்த உடையணிந்து பேருந்தில் ஏறினால் வயல்களையும் ஊர்களையும் வேடிக்கைப் பார்த்துக்கொண்டே போவான்.

தினமும் காலையில் அவன் முகச்சவரம் செய்துகொள்வதைப் பார்க்கவே ஒரு கூட்டம் கூடிவிடும். ஊர் நாவிதன் சாணைக்கல்லில் சர்ரக் சர்ரக் என அடப்பத்தை இழுத்துத் தேய்த்து... வரட் வரட் என கன்னத்தில் இழுத்து, மாதத்துக்கு ஒரு முறை முகச் சவரம் செய்துகொள்ளும் அந்த ஊர்க்காரர்கள், இவன் முகச்சவரம் செய்து கொள்வதை அதிசயமாய்ப் பார்த்தனர்.

கண்ணாடியைப் பார்த்து முகம் முழுவதும் நுரை நுரையாய் கிரீம் பூசி தனக்குத் தானே சவரம் செய்துகொள்வதும் அவனது சின்ன சேவிங் மிசினும் பிளேடும் கைக்கு அடக்கமான கத்திரிக்கோலும் அதில் அவனாகவே மீசை வெட்டிக் கொள்வதும்... வாயில் எச்சில் ஒழுகப் பார்த்தன பெரிசுகள். காற்றில் மிதந்து வரும் சேவிங் கிரீமின் வாசனையை மோப்பம் பிடிக்கவே சிறுசுகள் சுற்றிச் சுற்றி வரும்.

வார விடுமுறை நாட்களில் கையகல ரேடியோவை காதோடு வைத்துக்கொண்டு திரைப்பட பாடல்களையும் நாடகங்களையும் கேட்டபடி மண்பாட்டையிலும் பக்கிரிமலைப் பக்கமும் அவன் நடப்பதை அதிசயமாகப் பார்த்தனர் பெண்கள்.

இருபத்தாறு வயதில், கலையான முகமும் வாட்டசாட்டமான உடம்பும் சர்க்கார் உத்தியோகமுமாக வலம் வந்த மோகனசுந்தரத்தின் மீது ஊரிலிருந்த குமரிப்பெண்கள் எல்லோருக்குமே பெரும் ஏக்கமிருந்தது. யாருக்குக் கொடுத்து வைத்திருக்கிறதோ என ஊரே பேசிக்கொண்டது.

சுந்தரவதனத்துக்கு ஒரு பெண் குழந்தை பிறக்கவில்லையே என அப்போதுதான் அவர் கவலைப்பட்டார். பிறந்திருந்தால் அவனையே மாப்பிள்ளையாக மடக்கிப் போட்டிருப்பார்.

ஊரிலிருக்கும் சர்க்கார் பள்ளிக்கூடத்தில் மூன்றாவது நான்காவது என அரைகுறையாகப் படித்த குமரிகள், பள்ளிக்கூடமே போகாத குமரிகள் என எல்லோருமே




அவன் மீது ஏக்கமான ஏக்கமாக இருந்தனர். ஆனால், அவன் யாரையுமே ஏறெடுத்தும் பார்க்கவில்லை.

அந்த ஊரில் இரண்டே இரண்டு சமுகம் தான். அந்த இரண்டுமே இடைநிலை சாதிகள். ஏறக்குறைய சம அந்தஸ்து. ஆனாலும் கலப்பு எதுவும் நடக்காமல் கவனமாகப் பார்த்துக்கொண்டார்கள்.

அந்த இன்னொரு சமுதாயத்தைச் சேர்ந்த திருவேங்கடத்தின் ஒரே மகளான ஊர்மிளா அந்த ஊரிலேயே பேரழகி. அவளும் ஐந்தாம் வகுப்பு வரையே படித்திருந்தாலும், ‘சேட்டு ஊட்டுப் பொண்ணு மாரி அழகு’ என ஊரே மெச்சிக் கொண்டது.

மஞ்சள் சாமந்திப் பூவைப் போல தகதகக்கும் நிறம். திருத்தமான முகம். நல்ல உயரம். ஒரு துளி சதை கூட மிச்சமில்லாமல் கடைந்தெடுத்த உடல். பார்க்கிறவர்களின் கண்களை துடிக்கத் துடிக்க இழுத்துத் தள்ளுகிற கண்கள்.

அவள் தாவணியில்தான் எப்போதும் ஜொலிப்பாள். அவளுடைய அப்பா திருவேங்கடத்திற்கு மூன்று பையன்கள். நான்காவதாக இவள் கடைக்குட்டி. எட்டு ஏக்கரா நிலம். பெரிய கிணறு. கரும்பு, நெல், கேழ்வரகு, கம்பு என பருவம் தவறாமல் வெள்ளாமை. பசையுள்ள குடும்பம். ஒத்தைக்கு ஒரே பெண் என்பதால் குடும்பத்திற்கே செல்லம். குத்துவிளக்கைப் போல ஜொலிப்பதால் குடும்பத்தில் எல்லோருக்குமே பெருமை.

வீடு, வயல், கிணற்றுமேடு என மண் நோகாமல் நடப்பாள். எப்போதாவது கிணற்றடி மாமரத்தின் கீழே உட்கார்ந்து ஏதாவது படித்துக் கொண்டிருப்பாள். மாமரத்தில் ஊஞ்சலாடுவாள். கன்றுக்குட்டிகளைக் கொஞ்சுவாள். சற்று பெரிய இடம் என்பதால் நெருக்கமான தோழிகள் கூட யாரும் இல்லை.

மோகனசுந்தரத்தின் குடும்பம் குடியிருந்த வீட்டிலிருந்து ஏழாவது வீடு அவர்களின் வீடு. மோகனசுந்தரத்திற்கும் ஊர்மிளாவுக்கும்

ஜோடிப்பொருத்தம் பிரமாதமாக இருக்கும் என ஊரில் சிலர் பேசிக்கொண்டனர். இருவரும் ஒரே சமுதாயமாக இருந்திருந்தால் ஊர்ப் பெரியவர்களே சேர்ந்து சம்மந்தம் பேசியிருப்பார்கள். ஆனால், மாற்று சமுதாயமாக இருந்ததால் ஏமாற்றமாக இருந்தது.

ஆறேழு வருடங்களுக்கு முன்னால் திருவேங்கடத்தின் பங்காளிப் பெண் ஒருத்தி மாற்றுச் சமுதாயத்துப் பையனோடு ஏரிக்கரையில் தனியாக பேசிக் கொண்டிருப்பதை யாரோ பார்த்துவிட்டார்கள். அது வேகமாக ஊருக்குள் புகையத் தொடங்கியது.

ஒரு வாரம் கழிந்திருக்கும். அந்த விடியற்காலையில் அவர்களின் வீட்டின் பின்பக்கமுள்ள மாட்டுத் தொழுவத்தில் அவளுடைய பிணம் தொங்கியது. தீராத ஒற்றைத் தலைவலியினால் தூக்குப் போட்டுக் கொண்டதாகச் சொன்னார்கள்.

ஆனால், அவளின் அப்பனும் மாமனும் சேர்ந்து அவள் தலைமுடியைப் பிடித்து தரதரவென மாட்டுத் தொழுவத்துக்கு இழுத்துப் போயிருக்கிறார்கள். வாயில் துணியை நுந்தி, பூட்டாங்கயிற்றினால் கை கால்களைக் கட்டி, கண்மண் தெரியாமல் அடித்திருக்கிறார்கள், எவ்வளவு அடித்தும் ஆத்திரம் தீரவில்லை.

மாட்டைக் கட்ட நடப்பட்டிருந்த ஒரு முழ நீள முளைக் குச்சியைப் பிடுங்கியிருக்கிறான் அவள் மாமன்.

“அவ்ளோ நமுச்சுலு எட்த்துகிச்சா... இப்பவே உனுக்கு கூட்டம் கேக்குதா... அதுவும் அசலு ஆள்து... இந்தா... கை பெர்சு கூட்டம்...” என ஆத்திரத்தோடு அவளைக் கீழே தள்ளி, கால்களைப் பிளந்து, அந்த முளைக்குச்சியை அவள் பிறப்புறுப்பில் குத்தி உள்ளே சொருகியிருக்கிறான்.

அவள் வலியில் துடித்திருக்கிறாள். பிறப்பிறுப்பில் சொருகப்பட்ட அந்த முளைக்குச்சியுடனே அன்று இரவு முழுவதும் நரக வேதனைப் பட்டிருக்கிறாள். சிறுநீர் கழிக்கக் கூட முடியாமல் வயிறு வீங்கியிருக்கிறது. கத்தவும் முடியாமல் கை கால்களை உதைத்தபடி இரவெல்லாம் மாட்டுச் சானத்தில் புரண்டபடி கிடந்திருக்கிறாள். விடிவதற்கு முன்பாக அவள் கழுத்தை நெருக்கிக் கொன்றுவிட்டு, அதே பூட்டாங்க யிறால் உத்திரத்தில் கட்டித் தொங்கவிட்டிருக்கிறார்கள்.

இது எப்படியோ வெளியே கசிந்துவிட்டது

“பயிர்ல ஒரு கள மொளச்சாலும் ஒடனே புடுங்கி கடாசிட்ணும்... ஒன்னுதானேனு உட்டம்னா... நாளிக்கி பயிரவுட களதாங் மெர்சிகினு நிக்கும்...” என யாரோ சொன்னார்களாம்.

ஆனால், மோகனசுந்தரம் ஊராரின் இந்தப் பேச்சைப் பற்றியெல்லாம் அறிந்திருப்பானா எனத் தெரியவில்லை. தனக்கு எதுவும் சம்பந்தமில்லை என்பதைப் போல அவன் பாட்டுக் கேட்டான். உடற்பயிற்சி செய்தான். வேலைக்குப் போய் வந்தான்.

ஊர்மிளாவும் ஊர் வழக்கத்தைப் பற்றி ஏதாவது தெரிந்து வைத்திருப்பாளா என்பதும் யாருக்கும் தெரியவில்லை.

ஆடி மாதத்தில் அந்த மூன்றாவது ஞாயிற்றுக்கிழமை. கொள்ளாபுரியம்மன் திருவிழா நடைபெற இருந்த அன்று, சூரியன் மேலே எழுகிற அரையிருட்டு நேரத்தில், திருவேங்கடத்தின் கிணற்றுமேட்டில் ஒரு பெருங்கூட்டம் கூடியிருந்தது. மாமரத்தில் காகங்களும் பீகுருவிகளும் வாய் ஓயாமல் கத்திக் கொண்டிருந்தன.

இரவில் யாரோ கிணற்றில் விழுந்து விட்டதாக பதற்றத்துடன் பேசிக் கொண்டனர் ஊர்க்காரர்கள். நீளமான தாம்புக் கயிற்றில் பாதாள கொலுசைக் கட்டி கிணற்றில் இறக்கித் துழாவத் தொடங்கினார்கள். ஆழமான பெரிய கிணறு. தட்டாமலையாய் தளும்பும் தண்ணீர். சுற்றிச் சுற்றித் தேடிய பின்னர், அரை மணி நேரம் கழித்து பதாள கொலுசில் எதுவோ மாட்ட அவசர அவசரமாக மேலே இழுத்தனர். பாதாள கொலுசின் ஒரு கொக்கி இடுப்புப் பாவாடையில் மாட்டியிருக்க, முன்புறம் மடிந்து தொங்கியபடி ஒரு பிணம் மேலேறி வரவர... அடையாளம் தெரிந்ததும் அதிர்ந்து போன ஊராரின் அலறல் அந்த இடத்தையே கலங்க வைத்தது.

மஞ்சள் பாவாடையும் மஞ்சள் ரவிக்கையும் சிவப்பு தாவணியுமாய், மஞ்சள் கிழங்கு போன்ற ஊர்மிளாவின் உடல் எரிகிற நெருப்பைப் போல மேலேறி வந்தது. அலை அலையாய் கீழே தொங்கிய தலை முடியிலிருந்து தண்ணீர் தாரை தாரையாய்ச் சொட்டியது. அவளது இரண்டு கால்களும் சேர்த்து ஒரு கயிற்றால் கட்டப்பட்டிருந்தன. அதைப் பார்த்ததும் ஊரே திக்பிரமைப் பிடித்து நின்றது.

சில விநாடிகள் யாருக்கும் பேச்சு மூச்சு வரவில்லை. அவள் அம்மா மட்டும் வாயிலும் வயிற்றிலும் அடித்தபடி மண்ணில் விழுந்து அலறிக் கொண்டிருந்தாள்.

திருவேங்கடமும் அவரது பையன்களும் மணல் ஊற்றைப் போலக் கண்ணீர் வழிகிற கண்களுடன் பதைபதைப்போடு நின்றிருந்தனர். உடலைக் கீழே கிடத்தி, கட்டிலைக் கொண்டு வந்து அதில் படுக்க வைத்து கால் கட்டை அவிழ்க்கவும் மொத்தக் கூட்டமும் திமிறியபடி அலறியபது.

தாங்க முடியாத வயிற்று வலியால் கிணற்றில் குதித்துத் தற்கொலை செய்து கொண்டதாக ஊருக்குள் செய்தி பரவியது. நீச்சல் தெரியும் என்பதால் வயிற்றில் ஒரு கல்லையும் கால்களையும் அவளே கட்டிக்கொண்டு குதித்திருக்கிறாள்.

நடுப்பகலுக்குள்ளாகவே அவசர அவரசமாக சவ அடக்கம் நடந்து முடிந்துவிட்டது. அவர்களுடைய நிலத்தின் ஒரு பக்கத்திலேயே மாமரத்தின் கீழேயே அடக்கம் செய்து, சிமெண்ட் பூசி சமாதியும் கட்டிவிட்டனர்.

‘அவளது அப்பனும் அண்ணன்களும் அன்றைக்கு முதல் நாள் மாலை, இருட்டிய பிறகு ஊர்மிளாவை கிணற்று மேட்டுக்கு அழைத்துப் போனதை யாரோ பார்த்திருக்கிறாரகள்.

வேப்பமரத்தின் கீழே உள்ள முனீஸ்வரன் கற்சிலையின் முன்பு கோழி அறுத்துப் பொங்கல் வைத்து, அவளை உட்கார வைத்து பூஜை செய்து, அங்கேயே கறியும் சோறும் சமைத்து எல்லோரும் சாப்பிட்டிருக்கிறார்கள்.

சாப்பிட்டு முடித்ததும் ஊர்மிளாவின் கை கால்களைக் கட்டி, வாயையும் மூக்கையும் சேர்த்துப் பொத்தியிருக்கிறார்கள். துடிக்கத் துடிக்க உயிர் அடங்கிய பிறகு உடலை கிணற்றில் இறக்கியிருக்கிறார்கள்.’

இப்படி ஒரு பேச்சு மெல்ல மெல்ல ஊருக்குள் புகையத் தொடங்கியது. எல்லாமே யூகம்தான். நேரில் பார்த்தவர்கள் யாரும் இல்லை.

இருட்டிய பிறகு அந்தக் கிணற்றுப் பக்கம் போனால் ஊர்மிளாவின் அழுகைச் சத்தம் கேட்பதாகவும் குபீரென மல்லிகைப் பூவின் வாசனை வீசுவதாகவும் ஆந்தைகள் மாமரத்தில் கூடிக் கூடி அலறுவதாகவும் ஊரே பதறியது.

தேவதையைப் போல ஊரில் நடமாடிய ஊர்மிளா அற்ப ஆயுளில் போய்ச் சேர்ந்த பிறகும், வழக்கம் போலவே ஊரில் ஒவ்வொரு நாளும் விடிவதும் மறைவதுமாக இருந்தது.

ஆனால், திருவேங்கடத்தின் குடும்பம் மட்டும் ஊரைவிட்டே எங்கோ கிளம்பிவிட்டது. ஒரே மகள் செத்த சோகத்தை அவர்களால் தாங்க முடியவில்லை. இரவும் பகலும் கிணற்றுமேட்டிலும் சமாதியிலும் புரண்டு புரண்டு அழுது கொண்டே இருந்தாள் அவளது அம்மா.

அவர்கள் ஊரைவிட்டுப் போன பிறகு அவர்களின் வீடு பாழடையத் தொடங்கிது. நிலம் கரம்பானது. கிணறு புதர் மண்டத் தொடங்கியது.

கொஞ்ச நாட்கள் இதை ஊரே கூடி கூடிப் பேசிக்கொண்டிருந்தாலும் நாட்களின் வேகத்தில் எல்லாவற்றையும் மறக்கத் தொடங்கியது.

நான்கு மாதங்கள் கடந்திருக்கும். அப்போதுதான்... அந்த விடியற்காலையில் சூரியன் எழுவதற்கு முன்பாக எழுந்த மோகனசுந்தரம் ஊரே அதிரும்படி அலறிக்கொண்டு தெருத்தெருவாய் ஓடினான். தனக்குத் தானே பேசி, எக்காளமிட்டுச் சிரித்தான். நரியைப் போல ஊளையிட்டான்.

மீண்டும் அதிர்ந்து போனது ஊர். நம்ப முடியாமல் தவித்தது.

அவனது அழகில் மயங்கிய யாரோ ஒருத்தி அவனை வசப்படுத்த செய்வினை செய்துவிட்டதாக பேசிக்கொண்டது ஊர்.

அவனது காலடி மண்ணையும் தலை முடியையும் கொண்டு போய் வாலாஜாவில் இருக்கும் சூனியக்கார முசல்மானிடம் கொடுத்து சூனியம் வைத்தததாகவும் அது தலைகீழாகி மாறி பைத்தியம் பிடிததுவிட்டதாகவும் ஒரு பேச்சு அடிபட்டது.

“நல்லா தடகாத்தரமா கீற ஆளுக்கு சொம்மா எப்டி கிராக்கு புடிக்கும்... இது செய்வின தாம்பா...”

“சிவனேனு கீற ஆம்பளைக்கி யாரு செய்வின செய்வாங்க... சொம்மானா பயி சொல்லக் கூடாது... போன ஜென்மத்துல இன்னா பாவம் பண்ணாணோ...”

எப்படியும் பேசியது ஊர்.

சூனியம் வைத்த அந்த சாயபு நெஞ்சுவலி வந்து அடுத்த வாரமே திடுதிப்பென செத்துப் போய்விட்டாராம். அதனால் செய்வினையை திருப்பி எடுக்கவும் வழியில்லாமல் போய்விட்டதாம்.

“**நா**னு மருந்த கண்ல வைக்கும்போது மிருகமாட்டம் பலம் வந்து திமிரிகினு எய்ந்துக்குவாங்... பத்து பேரு புட்ச்சாலும் தூக்கி கடாசிட்டு போய்டுவாங்... ரொம்ப பலமா அய்த்தி புடிக்கணும்...” என்று சுப்பாராவிடம் சொன்னார் வைத்தியர்.

எல்லோரும் நம்பிக்கையில்லாமல் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

வைத்தியர் தனது நீளமான மருந்துப் பையை எடுத்துப் பிரித்தார். உள்ளேயிருந்து சின்னச் சின்ன சீசாக்களை எடுத்து எடுத்து தரையில் வரிசையாக அடுக்கினார். எல்லாமே கட்டைவிரல் அளவுள்ள சீசாக்கள். ஒவ்வவொரு சீசாவிலும் ஒவ்வொரு நிறத்தில் பவுடர் மருந்துகள். எண்ணெய்கள், லேகியங்கள். அத்தனை நிறங்களை அந்த ஊர் ஜனங்கள் அதற்கு முன்பு பார்த்ததே இல்லை.

பையிலிருந்து ஒரு கையகல வெங்களத் தட்டை எடுத்தார். தப்பணம் மாதிரி நீளமான சின்ன கரண்டியையும் வெளியே எடுத்தார். ஒவ்வொரு சீசாவாகத் திறந்து, அந்தச் சின்னக் கரண்டியின் முனையினால் ஒரு மயிரிழை அளவு மருந்தை எடுத்துத் தட்டில் போட்டார்.

நாற்பது ஐம்பது சீசாவிலிருந்து மருந்துகளை எடுத்து எடுத்துப் போட்டுக்கொண்டே இருந்தார். அவ்வளவு போட்டும் அந்தத் தட்டில் ஒரு துளியளவு மருந்து கூட சேரவில்லை. சுற்றியிருந்த கூட்டம் அதிசயமாக வைத்தக் கண் வாங்காமல் பார்த்துக்கொண்டே இருந்தது.

மொத்தமாக இரண்டு துளி அளவு மருந்து சேர்ந்ததும் கண்களை மூடி மந்திரம் போல ஏதோ முனுமுனுத்தார். அதே தப்பணத்தைத் திருப்பி கவனமாக மருந்தை கலக்கத் தொடங்கினார். கண்மை போல மருந்து திரளத் தொடங்கியதும் தப்பணத்தை வைத்துவிட்டு, விரல்களால் மருந்தை உருட்டத்




தொடங்கினார். பாஸ்பரஸ் உருண்டைகளைப் போல பளபளவென இரண்டு சிறிய உருண்டைகள் தயாரானது.

"ம்... நல்லா அம்த்திப் புடிங்க..." என்றார்.

இரண்டு பேர் சேர்ந்து மோகனசுந்தரத்தின் கால்களைப் பிடித்துக்கொள்ள, இரண்டு பேர் கைகளைப் பிடிக்க, இரண்டு பேர் தலையையும் தோள்களையும் அழுத்திக் கொண்டனர்.

மீண்டும் கண்களை மூடி கிழக்கைப் பார்த்து ஏதோ முனுமுனுத்தார் வைத்தியர். தலையை அசைத்தபடி எழுந்து மோகனசுந்தரத்தின் மார்பினருகில் நின்றார். இடது கையால் அவனது வலது கண்ணின் மேலிமையைத் தூக்கினார். வலது கையால் ஒரு துளி மருந்தை எடுத்து அவனது கண்களுக்குள் வைத்தார்.

அவ்வளவுதான். மின்சாரம் தாக்கியதைப் போல அவனது உடல் மேலே எழும்பித் துடித்தது. கட்டில் தொம் தொம் என அதிர்ந்தது. கைகளும் கால்களும் முறுக்கேறின. இடுப்பும் மார்பும் வில்லைப் போல வளைந்து எழுந்து எழுந்து விழுந்தன. பிடியை மேலும் இறுக்கிப் பிடித்தனர்.

"நல்லா அமுத்திப் புடிங்க..." எனக் கத்தினார் வைத்தியர்.

இன்னொரு ஒரு ஆள் ஓடி வந்து அவனது மார்பின்மீது விழுந்து அழுத்தினான். இப்போது இடது கண் இமையைப் பிரித்து அந்தக் கண்ணிலும் ஒரு துளி மருந்தை வைத்தார். மீண்டும் பெரும் ஆவேசம். உதறல். திமிறல். ஊளையிட்டபடி ஒரு உலுக்கு உலுக்கினான். படார் படார் என கட்டுகள் தெறித்தன. அழுத்திப் பிடித்திருந்தவர்கள் அதிர்ச்சியில் உறைய, புயலைப் போல எழுந்து அவர்கள் எல்லோரையும் தூசியை உதறுவதைப் போல உதறித் தள்ளினான்.

கத்தலும் கதறலுமாக தெருவில் இறங்கி கிழக்கு நோக்கி ஓடத்தொடங்கினான். எல்லோருக்கும் பேரதிர்ச்சி. திடீரென சுதாரித்துக் கொண்ட நான்கு பேர் அவன் பின்னால் ஓடத் தொடங்கினர்.

"வாணா... யாரும் பின்னால ஓடாதீங்க... உட்ருங்க...." என்றார் வைத்தியர்.

"அய்யோ சாமி... உட்டுட்டா எங்கனா ஓடிப்போய்டுவானே... ரோட்ல போயி வண்டில அடி பட்டுட்டா...?"

"அவ்ளோ தூரம் போவமாட்டாங்..."

அவரை அதிர்ச்சியோடு பார்த்தனர் எல்லோரும். கிழக்கை நோக்கி அலறியபடி ஓடிக் கொண்டிருந்தவனையே பயத்தோடு எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்க, வைத்தியர் மருந்து சீசாக்களை எடுத்து பழையபடி பையில் அடுக்கத் தொடங்கினார்.

எல்லோரும் அவரை கோபத்தோடு பார்க்க, ஒரு சொம்புத் தண்ணீர் வாங்கி கைகளைக் கழுவினார். ஒரு வாய் தண்ணீர் குடித்தார். பையை எடுத்துக் கொண்டு மேற்கைப் பார்த்து நடக்கத் தொடங்கிவிட்டார். தட்சணை கூட எதுவும் வாங்கிக் கொள்ளவில்லை.

அதிர்ச்சியோடு வைத்தியரையும் கிழக்கையும் மாறி மாறிப் பார்த்தது ஜனக்கூட்டம். சுப்பாராவ் பிரமை பிடித்தவரைப் போல அசைவற்று நின்றிருந்தார்.

கிழக்கில் நாய்களின் குரைப்பு அதிகரித்தது. ஊளையிட்டபடி ஓடிக்கொண்டிருந்த மோகனசுந்தரம் திடீரென நின்றான். ஊளையிடுவதும் நின்றது. தலையை உதறி கிழக்கும் மேற்குமாகப் பார்த்தான். அவனை பயத்தோடு பார்த்தபடி தெருவில் நின்றிருந்த பெண்களும் ஆண்களும் பின்வாங்கி, வீடுகளுக்குள் புகுந்து கொண்டனர். நாய்கள் விடாது குரைக்கத் தொடங்கின.

அவன் வானத்தையும் சூரியனையும் மரங்களையும் தெருவையும் பார்த்தான். இமைகள் சுறுங்கின. புருவங்கள் நெளிந்தன.

சட்டெனத் திரும்பி வீட்டை நோக்கி நடக்கத் தொடங்கினான். சாதாரணமாக வாசல் படியேறி வீட்டின் முற்றத்துக்கு வந்தான். எல்லோரும் திக்பிரமை பிடித்தபடி நின்றனர்.

"மா... டைமாச்சி... ஆபீஸ் போவணும்... சேவிங் கிட் எங்க...?" என அம்மாவிடம் கேட்டபடி வீட்டுக்குள் நுழைந்தான்.

எல்லோருக்கும் பெரும் மருட்சி. சேவிங் செட்டை அவனே தேடி எடுத்தான். கண்ணாடியைப் பார்த்து முகத்தில் கிரீம் பூசி, பிரஸ்ஸால் நுரை ததும்ப தேய்த்தான். சாதாரணமாக மழிக்கத் தொடங்கினான்.

எல்லோரும் ஒரு வார்த்தையும் பேச முடியால் பார்த்துக் கொண்டு நின்றனர். வழக்கத்துக்கு மாறாக வீட்டின் பின்புறம் போய் குளித்தான். சாப்பாடு போடச் சொல்லி சாப்பிட்டான். அலுவலகப் பையை எடுத்துக்கொண்டு கிளம்பிவிட்டான்.

பெருந்துயரத்திலிருந்து விடுபட்ட சுப்பாராவும் அவனது குடும்பமும் வைத்தியர் போன திசையைப் பார்த்து கை கூப்பி கும்பிட்டது. ஊர்க்காரர்கள் கும்பல் கும்பலாக நின்று இந்த அதிசயத்தைப் பற்றி பேசத் தொடங்கினர்.

மாலை இருட்டத் தொடங்கியது. மோகனசுந்தரத்திற்குப் பிடித்தமான சுண்டைக்காய் வத்தல் குழம்பும் சோறும் செய்துவிட்டு அவனுக்காக தெருவையே பார்த்துக் கொண்டு குந்தியிருந்தாள் அவனது அம்மா கோமளவல்லி.

"இனிம இந்த ஊரே வாணா... ஏதோ அந்த எல்லம்மா புண்ணித்துல பையன் நல்லபடியா ஆய்ட்டாங்... அவங் வந்ததும் நாளிக்கே ராணிப்பேட்ட பக்கமா போயிட்லாம்..." என்றார் சுப்பாராவ்.

இருட்டி, பேருந்தும் வந்து திரும்பிவிட்டது. மோகனசுந்தரத்தை காணவில்லை.

அவர்களுக்கு பதைபதைப்பாக இருந்தது. அதற்கு மேல் டவுனிலிருந்து வர பேருந்து இல்லை.

"ஏங்க... அவன தனியா அனுப்பனது செரியில்ல... நாம யார்னா கூட போயி கீணம்..."

"நல்லா தெளிவாதான போனாங்... ரொம்ப நாளு கய்ச்சி போயிகீறாங்... வேல ஜாஸ்தியா இருக்காதா... ஆட்டோ புட்ச்சிகினு வருவாங்..." என தைரியம் சொன்னார் சுப்பாராவ்.

ஒன்பது, பத்து, பதினொன்று என நேரம் கடக்க, சாப்பிடாமலேயே கண் அயர்ந்துவிட்டனர் அவர்கள்.

காலை விடிகிற போது அந்தக் கிணற்று மேட்டிலிருந்த மாமரத்திலிருந்து காகங்களும் பீகுருவிகளும் வாய் ஓயாமல் கத்திக் கொண்டிருந்தன. ஊர் ஜனங்கள் பரபரப்பாக கிணற்று மேட்டில் குவியத் தொடங்கினர். எல்லோர் கண்களிலும் பயம். பதற்றம்.

கிணற்றில், புதர்களுக்கிடையில் தெரிந்த தண்ணீரில் குப்புறக் கவிழ்ந்து மிதந்து கொண்டிருந்தது மோகனசுந்தரத்தின் உடல். அவனது கைகளும் கால்களும் கட்டப்பட்டிருந்தன.

ஒன்றும் புரியாமல் திக்பிரமை பிடித்தபடி நின்றனர் ஊரார்.

தலைவிரி கோலமாக ஓடிவந்த கோமளவல்லி, பிணத்தைப் பார்த்ததும் மாரிடலடித்தபடி வெடித்து அழ, மாமரத்திலிருந்த ஒரு காகம் அதிர்ந்து எழுந்தது. கா... என அவலமாய்க் கரைந்தபடி மேற்கைப் பார்த்துப் பறக்கத் தொடங்கியது. கனமான மழைத் தூறலைப் போலக் கீழிறங்கிய அதன் எச்சம் ஊர்மிளாவின் சமாதியின் மீது விழுந்து, வெள்ளைப் பூவாய்ச் சிதறியது.

*mail to:* **kavipithan71@gmail.com**



# மு. முபாரக் கவிதைகள்

பக்கத்து வீட்டு அலைபேசியில்
உறவுகளிடமிருந்து வரும்
தகவலுக்காய் பல மணி நேரம்
காத்திருந்தவனிடம்
இப்போது பல அலைபேசிகள்...

அடுத்த வீட்டுக்காரனின்
மிதிவண்டியை நம்பி
பயணத்தை தீர்மானிப்பவனிடம்
இன்று பல வித இருசக்கர வாகனங்கள்...

கடைசி பேருந்து வருவதற்குள்
ஊர் திரும்பிட வேண்டுமென்று
வாழ்ந்தவனிடம்
பல ஆடம்பர வாகனங்கள்...

தேர்வு முடிவுகளை பார்ப்பதற்கு
தேநீர் கடைக்கு வந்து காத்திருந்தவன்
வீட்டில்
கணிப்பொறி இரண்டு இருக்கிறது...

சளி காய்ச்சலுக்கு
வைத்தியர் வீட்டை தேடி அலைந்தவனுக்கு
ஒரு அழைப்பில்
எல்லா மருந்துகளும்
வீட்டுக்கே வந்துவிடுகின்றன...

குளிப்பதற்காக
நடந்து போய் வந்த
நதியை தொலைத்துவிட்டு
நீச்சல் குளங்களைத்
தேடிக்கொண்டிருக்கிறோம்...

அவள் அழகென்று
தெரியும் ஆணவப்பட்டதில்லை
சம்பாத்தியம் குறைவென்றாலும்
தலை குனிய வைத்ததில்லை
தெரிந்தோ தெரியாமலோ
காயப்படுத்தியிருந்தாலும்
தெரியாமல் கூட காயப்படுத்தியதில்லை
ஒரு முழம் பூ வாங்கி
கொடுத்ததில்லையென்றாலும்
பூவின் மென்மை அவளிடம் குறைந்ததில்லை
குழந்தைகளென குடும்பம் பெரியதானலும்
முதல் குழந்தையென
கொண்டாடத் தவறியதில்லை
உடல்நிலை சரியில்லாமல்
படுத்த படுக்கையாகயிருந்தும்
கேட்டுக்கொண்டேயிருக்கிறாள்...
நேர நேரத்துக்கு
சரியா சாப்பிடுறிங்களாயென
வலியில் கூட வலிமை தர
மனைவிகளால் மட்டுமே முடிகிறது!

மருத்துவர்கள்
உங்களைச் சுற்றி
வட்டமிட்டு நின்றிருக்கிறார்களா
நேசித்தவர்களின்
மரணத்தை கண் முன்
கண்டிருக்கிறீர்களா
உணவுக்காக கையேந்தும்
யாசகர்களை பார்த்ததுண்டா
மழை வெயிலென பார்க்காது
உழைத்து சம்பாதித்த பணத்தை
முழுமையாக யாரென அறியாத
ஏழை ஒருவருக்கு அளித்து
விட்டுச் செல்லும் மனிதரை
கடந்ததுண்டா
இவையெல்லாம் கண்டிருந்தால்
போதி மரம் தேவையில்லை
நீங்கள் புத்தனாகிவிட்டீர்கள்
இத்தனையும் கண்ட பின்
பணம் பணமென அழைகிறீர்களா
நீங்கள் பித்தனாகிவிட்டீர்கள்!

*mail to:* **ammubarak2011@gmail.com**

**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.**

**Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.**
**Editor : PRABHU THILAAK**

Posted at patrika channel egmore (Posted between 28-31st of Every month)
Date of Publications : 25th of every month Reg.No.TN/TBM/150/2024-2026. ISSN Number 2456-3447 Dated: 04/10/2016.
R.DisNo. 2010/2002 RNI. TNTAM/2006/17955 Licenced to Post without Prepayment No: TN/PMG(CCR)/WPP 722/2024-2026.






# உங்களுக்காக ஸ்ரீராம்.

## உங்கள் ஒவ்வொருவருக்காகவும் ஸ்ரீராம்!

1975-இல் திரு. வரதராஜன் தனது ஒரே மகளின் கல்யாண செலவு திட்டத்திற்கு மேல் அதிகரித்தது. பாக்கித் தொகைக்கு எங்கே செல்வது? மனைவியின் நகையை அடமானமோ, நிதியுதவியோ வீட்டின் மீது கடனோ இதற்கெல்லாம் வழியில்லை. அவர் எப்படிச் சமாளித்தார்? ஏற்கனவே சேர்ந்திருந்த ஸ்ரீராம் சீட்டை ஏலத்தில் எடுத்து வெளி ஆதரவையோ, உதவியையோ நாட வேண்டிய அவசியமின்றி தனது தேவைக்கான நிதியைப் பெற்றார்.

இன்று திருமதி. லதா மூசிறியில் காய்கறி வியாபாரம் செய்து வருகிறார். ஸ்ரீராம் நிறுவனத்தில் ரூ.1 இலட்சம் நிதியுதவி பெற்று வியாபாரத்தில் முதலீடு செய்து நல்ல வருமானம் பெற்று ஸ்ரீராம் குடும்பத்தில் அங்கத்தினராக இருக்கிறார்.

1974 ஆம் ஆண்டுத் தொடங்கப்பட்ட ஸ்ரீராம் சிட்ஸ் நிறுவனம், குறைந்த தொகைகளில் சீட்டுகளைத் தொடங்கி அனைத்துத் தரப்பு மக்களின் வீடு, கல்வி, திருமணம் மற்றும் மருத்துவச் செலவு என அவர்களின் பலவித தேவைகளையும் பூர்த்திச் செய்யக் கடந்த 50 வருடங்களாக 5 தலைமுறைகளாகப் பெரும் பங்களித்துள்ளது.

தொழில் முனைவோர்களை அதிகம் கொண்ட நாடு இந்தியா. அத்தகைய தொழில் முனைவோரை ஊக்குவித்து, நிதி அளித்து, வருவாய் பெருகவும், வாழ்க்கைத் தரம் மேம்படவும் உதவுகிறோம். கடந்த 50 வருடங்களாக விஜயதசமி மற்றும் சித்திரை என இரு முறை நடைபெறும் சீட்டுத் திருவிழாவில் பங்கு கொண்டு உங்கள் தேவைகளுக்கு ஏற்ப திட்டங்களைத் தேர்ந்தெடுத்துப் பயனடைந்துள்ளீர்கள். இந்த இணக்கமான உறவு அன்றும், இன்றும், என்றும் தொடர்ந்து கொண்டே இருக்கும். மேலும் விவரங்களுக்கு அருகில் உள்ள ஸ்ரீராம் சிட்ஸ் கிளைக்கு வாருங்கள்.

**அன்றும், இன்றும், என்றென்றும்..!**



**ஸ்ரீராம் சிட்ஸ்**

மக்களின் வளமான வாழ்வுக்கு வழிகாட்டி

கிரீம்ஸ் துகார், 149 கிரீம்ஸ் சாலை, சென்னை 6
போன்: 4223 6000 www.shriramchits.com